

பேட்டவாய்த்தலை, வற்றாக்காளி வலசு காவடிக்குழு பொன்விழா | உறையூர், அந்தியூர் கும்பாபிஷேகங்கள் | இலங்கை உலகத் திருக்குறள் மாநாடு

ரூ.20/- | மார்ச் 2020 பங்குனி | தீபம்: 8 ஒளி: 3



# 24 மனை குலமுரசு

தமிழ் மாத இதழ்

## உங்கள் அன்பினாலும், ஆதரவினாலும்



ஆம்

ஆண்டில்

# 24 மனை குலமுரசு

தமிழ் மாத இதழ்

RNI No.: TNTAM/2013/48200

தீபம்: 8 ஒளி: 3

மார்ச் 2020 பங்குனி

24 மனை தெலுங்கு செட்டியார்கள் இனமக்களுக்காக
24 மனை தெலுங்கு செட்டியார்கள் சேரிட்டபிள் டிரஸ்ட்
அறக்கட்டளையால் நடத்தப்படும் அரசியல் சார்பற்ற சமூக மாத இதழ்
24 மனை தெலுங்கு செட்டியார்கள் தலைமைச் சங்கம்
கீழ்ப்பாக்கம், சென்னை - 600010.

சிறப்பாசிரியர்:
**கரூர் கே.சி.பழனிசாமி**
Ex.MP., Ex.MLA.,

ஆசிரியர்:
**Dr. துரை அங்குசாமி**
M.A.,B.L.S.,B.Ed.,Ph.D.,


40 லட்சம் மக்களின் நாடித்துடிப்பு
24 மனை குலமுரசு மாத இதழ்

**ஆண்டுச் சந்தா ரூ. 200/-**

**ஆண்டு சந்தா செலுத்தும் முறை**

| | |
|---|---|
| Account Name | : 24 MANAI KULAMURASU |
| Bank Name | : CANARA BANK |
| Branch | : CHENNAI KILPAK |
| Account Number | : SB. A/c. 1650101014869 |
| IFSC CODE | : CNRB0001650 |

மேற்கண்ட வங்கிக் கணக்கில் ஆன்லைன் மூலம் ரூ.200/- செலுத்தி அதன் பரிவர்த்தனை விபர ஸ்கிரீன்ஷாட்-ஐ 9965 900 990 என்ற வாட்ஸ்அப் (அ) kulamurasuoffice@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரிக்கு உங்கள் முகவரி மற்றும் செல்போன் எண் குறிப்பிட்டு அனுப்பவும். கனரா வங்கியில் செலான் மூலம் பணமாக செலுத்துவோர் சந்தா ரூ.200 + வங்கி சேவைக் கட்டணம்+GSTவரி ரூ.60 சேர்த்து ரூ.260/-ஐ கனரா வங்கிக் கணக்கில் செலுத்தி, கௌண்டர் ஃபைல் ரசீது நகலுடன் உங்கள் முகவரி எழுதி மின்னஞ்சல் (அ) வாட்ஸ்அப் (அ) தபாலில் அனுப்பவும்.


24 மனை குலமுரசு,
330/1, சின்னாண்டான் கோவில் வீதி,
கரூர் - 639001.
Customer Care Cell: 9965 900 990
Ph: 04324-240663 - K.C.S.R.சிவக்குமார்
E-Mail: kulamurasuoffice@gmail.com


# ஆசிரியர் குரல்

உறவுகளே வணக்கம்!

24 மனை குலமுரசு..
ஒன்பதாம் ஆண்டில் தன் வெற்றிப் பயணத்தை
அன்புடன் தொடங்குகிறது!

நீண்ட பாரம்பரியமும் அறுபதாண்டு கால
நெடிய வரலாறும் உடைய குலமுரசு
நிதிச் சுமையால் இடைஇடையே
நின்று பின்னர் இயங்கிய நிலைமாறி
நூறு மாதங்களாக தொடர்ந்து வெளிவந்து
துல்லியம் காத்து புதிய சரித்திரம் படைத்துள்ளது.

வண்ணம் - வனப்பு - வடிவமைப்பு - இவற்றால்
வாசக நெஞ்சங்களை வசீகரித்துள்ளது குலமுரசு!
வரவேற்று வாழ்த்துக்கூறும் இனமக்களின்
வசந்த அன்புக்கு நெஞ்சம் நெகிழ்ந்த நன்றி!

எனக்கு குலமுரசின் ஆசிரிய மகுடம் சூட்டி
என் எழுத்தாளுமைக்கு அங்கீகாரம் தந்த
வழிபடுதெய்வமாக நான் போற்றும் பெருந்தகை
வள்ளல் KCP அவர்களை வணங்கி மகிழ்கிறேன்.
வரிவிடாமல் குலமுரசை முழுமையாகப் படித்து
வழிகாட்டுதல் தரும் முதல் வாசகரும் விமர்சகரும் இவரே!
குலமுரசின் வெற்றிக்கும் அதுவே மூலகாரணம்!

உற்சாகமான குலமுரசு தேரோட்டத்திற்கு
அச்சாணியாக இருந்து எம் இதயங்களில்
அரசாட்சி புரியும் விளம்பரக் கொடையாளர்கட்கு
ஆயிரமாயிரம் நன்றி மலர்கள்!

தேசம் பாதியாய் நிறைந்திருக்கும்
தெலுங்கினத்தவர் இல்லங்கள்தோறும்
தேன்தமிழ் குலமுரசு இருக்கவேண்டும்!
ஆம்! இதுவே நம்
இனமக்களை இணைக்கின்ற பாலம்!
இன்றே சந்தா செலுத்தி குலமுரசு குடும்பத்தில்
இணைவோம்! இது ஓர் இனச்சேவை!

அன்புடன் உங்கள்
**துரைஅங்குசாமி**



புதிய சந்தா பதிவு செய்தல், புதுப்பித்தல்,
முகவரி மாற்றம் மற்றும் மணக்கோலம் பகுதியில்
சேர்க்க மற்றும் திருத்தம் செய்ய தொடர்பு
கொள்ளவேண்டிய செல்பேசி/வாட்ஸ்ஆப் எண்:

**99 65 900 990**

(காலை 10 மணி முதல் மாலை 7 மணி வரை)


Scan & Save Contact


24 மனை குலமுரசு இதழை முகநூலில் தொடர..
https://www.facebook.com/24manaikulamurasu

# பேட்டவாய்த்தலை, வற்றாக்காளிவலசு பங்குனி உத்திரத் தீர்த்தக்காவடி பாதயாத்திரைக் குழுவின் 50ஆம் ஆண்டு பொன்விழா

அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருவருளால், கடந்த 16-02-2020 ஞாயிற்றுக்கிழமை பழனி திண்டுக்கல் ரோடு, செல்வ மஹாலில் பேட்டவாய்த்தலை, வற்றாக்காளிவலசு தீர்த்தக் காவடி அன்பர்களின் பாதயாத்திரைக் குழுவினர், தங்களது 50ம் ஆண்டு நிறைவையொட்டி பொன்விழா வைபவங்களை சிறப்பாக நடத்தினர்.

நம் இனமக்கள் அதிகம் மேற்கொள்ளும் மேற்படி காவடி திருப்பணியில் கடந்த 81 ஆண்டுகளாக ஈடுபட்டு வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

நிகழ்ச்சியின் தொடக்கத்தில் மகளிர் அணியினைச் சேர்ந்த திருமதி. பத்மாவதி ஆறுமுகம், திருமதி சாத்தம்மை, பெரிய கருப்பன், திருமதி. பூங்கொடி ராஜ்மோஹன், திருமதி. கலாவதி தங்கராஜ் மற்றும் திருமதி. மணிமேகலை சுப்ரமணியன் ஆகியோர் குத்துவிளக்கு ஏற்றி மங்களகரமாக நிகழ்ச்சியைத் தொடங்கி வைத்தனர்.



கடவுள் வாழ்த்துடன் தொடங்கிய நிகழ்வில் வரவேற்புரையாற்றிய நிகழ்ச்சியின் தலைவர் திரு. K.ஆறுமுகம் அவர்கள், அனைவரையும் வரவேற்று, பாத யாத்திரையில் திரு. K.C.பழனிசாமி அவர்களின் ஆசி அவ்வப்போது இருந்து வந்தது குறித்தும் எடுத்துரைத்தார்.

அதன்பின் வாழ்த்துரை வழங்கவந்த குலமுரசு ஆசிரியர் திரு. துரைஅங்குசாமி அவர்கள், காவடிக் குழுவின் சிறப்பு பற்றியும், அதன் மூலம் சொந்தங்கள் எவ்வாறு நெருக்கமாகின்றன என்பது பற்றியும் எடுத்துரைத்தார்.

அடுத்துப் பேசிய பாதயாத்திரைக் குழுவின் செயலர் V.S.P.தங்கராஜ் பாதயாத்திரைக் குழுவின் சாதனைகளையும், பெருமைகளையும் எடுத்துரைத்ததுடன், திரு.K.C.P. அவர்கள் எதிர்கால அரசியலில் உயர்ந்த நிலைக்கு வர வாழ்த்தினார்.

பாதயாத்திரைக்குழு மகளிர் அணி சார்பில் அதன் தலைவி திருமதி. மணிமேகலை Dr.சுப்ரமணியன் அனைவரையும் வரவேற்று, நிகழ்ச்சியின் வெற்றிக்கு வாழ்த்தினார். அதைத் தொடர்ந்து பேசிய, மகளிர் அணி செயலாளர் திருமதி. சுப்புலட்சுமி(சுபா) குமாரவடிவேல் மகளிர் அணியின் செயல்பாடுகள் குறித்தும், சாதனைகள் குறித்தும் எடுத்துரைத்தார்.

பாதயாத்திரைக் குழுவின் மூத்த உறுப்பினர் திரு. Dr.அரு.பெரியகருப்பன் M.S.M.D., அவர்கள், காவடிக் குழுவின் சார்பாக திரு. M.சம்பத்,

வெள்ளகோவில், திரு.சோலை. ரமேஷ் வெள்ளகோவில் ஆகியோர் வாழ்த்துரை வழங்கிய பிறகு பாத யாத்திரைக் குழுவின் துணைச் செயலாளர் திரு. R.செந்தில்குமார் நன்றியுரை வழங்கினார்.

நிகழ்ச்சியின் முத்தாய்ப்பாக பாதயாத்திரைக் குழுவின் பொன்விழா மலரை, நம் இனப்பாதுகாவலர், பழனி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவலர் குழு முன்னாள் தலைவர் திரு. K.C.பழனிசாமி Ex.M.P. அவர்கள் வெளியிட்டார்.தொடர்ந்து காவடி முன்னோர்களின் வாரிசுகளுக்கும், காவடி பொறுப்பாளர்களுக்கும், பாதயாத்திரை முக்கியஸ்தர்களுக்கும் பொன்விழா நிறைவு கேடயங்களை வழங்கிப் பாராட்டி சிறப்புரை நிகழ்த்தினார்.

அவரது உரையில் தாம் பழனி திருக்கோயில் அறங்காவலர் குழுத் தலைவராக பணியாற்றியபோது கிடைத்த அனுபவங்களை எடுத்துரைத்தார். அவரது உரை அனைவருக்கும் முருகனின் அதிசயங்களை அறிய வைத்தது.

மதிய உணவு இடைவேளைக்குப் பிறகு பாதயாத்திரைக் குழு உறுப்பினர்களின் வாரிசுகளான செல்வி ஸ்ருதி கண்ணன் அவர்களின் வீணை இசை, தேன்மதுர இசைவாணி திருப்பூர் செல்வி. த.சண்முகபாக்யஸ்ரீயின் பாட்டுக் கச்சேரியும், காவடி அன்பர்களது குழந்தைகளின் நாட்டிய நிகழ்ச்சிகள் முதலியன நடைபெற்றன.

பாதயாத்திரைக்குழுவின் சார்பில் அனைத்து உறுப்பினர்களுக்கும் மற்றும் காவடி அன்பர்களுக்கும் பொன்விழா சீருடைகள் வழங்கி கௌரவித்தனர். அத்துடன் மகளிர் அணி சார்பில் அனைத்து மகளிர் அணி உறுப்பினர்களுக்கும் சீருடைகள் வழங்கப்பட்டது.



மகளிர் அணி பொருளாளர் திருமதி. சந்திரகலா குமார், துணைப் பொருளாளர் திருமதி. விஜய்சாந்தி தங்கராஜ் ஆகியோர் முன்னிலையில் செயற்குழு உறுப்பினர்கள் மற்றும் சில உறுப்பினர்கள் ஆற்றிய பங்கு மிகவும் பாராட்டுதற்குரியது.

பொன்விழா கொண்டாட்டங்களை சிறப்பாக நடத்த திட்டமிட்டு செயல்படுத்திய அதன் செயலாளர் திரு.V.S.P. தங்கராஜ், அதற்கு உறுதுணையாக நின்ற தலைவர் திரு. K.ஆறுமுகம், பொருளாளர் திரு. V.S.S.குமார், திரு. T.V.M.முருகேசன் மற்றும் செயற்குழு உறுப்பினர்கள், விழாக்குழுவினர், மகளிர் அணியினர் ஆகியோரின் பங்களிப்பு பாராட்டதக்கது. கலந்து கொண்ட அனைவரின் மனதிலும் பதிந்த ஒரு பசுமை நிகழ்ச்சியாக அமைந்தது. அதற்கு அருளிய இறைவனைப் பணிந்து பேட்டவாய்த்தலை, வற்றாக்காளிவலசு காவடி அன்பர்கள் புகழ் மற்றும் அதன் பாதயாத்திரை குழுவினரின் பணி வளர்க என்று வாழ்த்துவோம்.

செய்தித் தொகுப்பு: **V.S.P. தங்கராஜ்**





# குடியரசுத் தலைவர் விருது பெற்ற
# திரு. N.T.P.A. சண்முகராஜ்



சுண்டக்காமுத்தூர் திரு. N.T.P.ஆறுமுகம் செட்டியார் அவர்கள் மகன் திரு. N.T.P.A. சண்முகராஜ் அவர்கள், Senior Intelligence Officer DRI Regional Unit. Coimbatore. அவர்கள் பாரதக் குடியரசுத் தலைவர் அவர்களின் விருதுக்கு தேர்வு செய்யப்பட்டுள்ள செய்தியை குலமுரசு இதழில் ஏற்கனவே வெளியிட்டிருந்தோம்.

மரபுப்படி கடந்த குடியரசு தினத்தன்று தலைநகர் டெல்லியில் நடைபெற்ற விழாவில் மத்திய நிதித்துறை துணை அமைச்சர் திரு. அனுராக் தாகூர் அவர்கள் பாராட்டிதழும் பதக்கமும் வழங்கி கௌரவித்தார்.

இவர் பதவியேற்ற 1986 ஆம் ஆண்டு முதல் கடந்த 33 ஆண்டு கால அரசுப் பணியில் நாட்டிற்கு மிகச்சிறப்பான சேவையை ஆற்றியுள்ளார்.

கடத்தல் தடுப்புப் பிரிவில் பணியாற்றி வரும் இவர் இதுவரை 150 கிலோ தங்கத்தை கைப்பற்றியுள்ளார். இதன் மதிப்பு சுமார் ரூ.50 கோடியாகும். சுமார் ரூ. 97 கோடி மதிப்புள்ள தடை செய்யப்பட்ட போதை பொருட்களான ஹெராயின், கேட்மைன் போன்றவற்றையும், ரூ. 9 கோடி மதிப்பிலான செம்மரங்கள், ரூ. 2கோடி மதிப்பிலான எலக்ட்ரானிக் சாதனங்கள், 1 கோடி மதிப்பிலான கரன்சி நோட்டுகள், 32.69 லட்சம் மதிப்பிலான வெளிநாட்டு சிகரெட்டுகள் என மொத்தம் 112.45 கோடி மதிப்பிலான கடத்தல் மற்றும் வரி ஏய்ப்பு செய்த பொருட்களைப் பறிமுதல் செய்துள்ளார். இதில் அரசுக்கு ரூ.74 கோடியை மீட்டுக் கொடுத்துள்ளார். இதைப் பாராட்டி கௌரவிக்கும் வகையில் இவ்விருது அவருக்கு வழங்கப்பட்டுள்ளது.

தகவல்: கவிஞர் **பஞ்சம் மணியன்,**
சுண்டக்காமுத்தூர்.


**PRESS & REGISTRATION OF BOOKS ACT**

Registration of Newspapers (Central) Rules, 1856
FORM IV (SEE RULE 8) Statement about
Ownership & other particulars about Newspaper

**24 MANAI KULAMURASU**

| | |
|---|---|
| 1. Place of Publication | 155/203, E.V.R. High Road, Kilpauk, Chennai - 600 010. |
| 2. Periodicity of its Publication | Monthly |
| 3. Printer's Name | S.Radhakrishnan |
| Nationality | Indian |
| Address | Sri Jayalakshmi Art Printers, 333, Puthu Nagar West Avenue M.K.B. Nagar, Vyasarpadi, Chennai - 39. |
| 4. Publisher's Name | Dr.Durei Angusamy |
| Nationality | Indian |
| Address | 155/203, E.V.R. High Road, Kilpauk, Chennai - 600 010. |
| 5. Editor's Name | Dr.Durei Angusamy |
| Nationality | Indian |
| Address | 155/203, E.V.R. High Road, Kilpauk, Chennai - 600 010. |
| 6. Name and address of individuals who own the newspaper holding More than one per cent of the total capital. | 24 Manai Telugu Chettiar Charitable Trust 155/203, E.V.R. High Road, Kilpauk, Chennai - 600 010. |

I, DR.DUREI ANGUSAMY hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Dated: 02.03.2020

Signature of Publisher:
DR.DUREI ANGUSAMY

# மகாப்பெரியவரின் மகத்தான கருணை



## சனி பிரதோஷம் ஸ்பெஷல் தரிசனம்!

பக்தர்கள் தங்களுக்குள்ள குறைகள், குடும்பச் சிக்கல்கள், மனத்துயரங்களை மகான்களிடம் தரிசன நேரத்தில் வாய்விட்டுக் கூறியதும், மகான்களின் கருணையாலும் அருளாசியாலும் அதற்கு விமோச்சனம் பெறுவார்கள். நம் காஞ்சி மகான் பக்தர்கள் மன ஓட்டத்தை உய்த்துணர்ந்து அவர்களின் குறைகளுக்கு தீர்வு காண்பது அவர் வழக்கம். மனதைப் படிக்கும் மகோன்னத சக்தி காஞ்சிப் பெரியவரிடம் இருந்தது. அதற்கு சான்றாக ஒரு நிகழ்ச்சி.

மகான்கள் நினைச்சா, எப்படிப்பட்டவருடைய கஷ்டத்தையும். எந்த மாதிரியான சூழ்நிலையிலும் போக்கிட முடியும்கறது நிதர்சனம். அப்படி பக்தர் ஒருத்தரோட கஷ்டத்தை மகா பெரியவா போக்கினதைத்தான் இப்போ பார்க்கப்போறோம்.

ஒரு சமயம் மகாபெரியவா வெளியூரில் முகாமிட்டிருந்த சமயத்தில், வழக்கம்போல சுற்றுவட்டாரப் பகுதியிலிருந்து ஏராளமான பக்தர்கள் வந்து தரிசனம் செய்தனர்.

அவர்களில் மகாபெரியவர் தங்கியிருந்த இடத்துக்கு கொஞ்சம் தள்ளியிருந்த சிவன் கோயில் குருக்களும் ஒருத்தர். கோயிலில் இருந்து கொஞ்சம் புஷ்பம், வில்வதளம், விபூதி, குங்குமம் எடுத்து வந்து சுவாமி பிரசாதம் என்று சொல்லி மகா பெரியவா கிட்டே கொடுத்து விட்டு, ஆசிர்வாதம் வாங்கிக் கொண்டு புறப்பட்டு விட்டார் அந்த குருக்கள்.

இது நடந்து ரெண்டு நாளைக்குப் பிறகு, பிரதோஷம் வந்தது. அன்னிக்கு சாயந்திரம் நாலு மணி இருக்கும். எந்த முன் அறிவிப்பும் இல்லாமல், தரிசனம் தந்து கொண்டு இருந்த இடத்திலிருந்து எழுந்து கொண்ட பெரியவா, மளமளன்னு வெளியில் இறங்கி நடக்க ஆரம்பிந்தார்.

எங்கே போறார்? எதுக்குப் போறார் என மடத்து சிப்பந்திகளுக்கே தெரியாததால், எல்லாரும் அவசர அவசரமாக அவர் பின்னால் ஓடினர். பரமாசார்யா நடை, அவ்வளவு வேகம்! என்னவோ காரணம் இருக்கும்னு பக்தர்களும் சேர்ந்து நடந்தனர்.

மளமளன்னு நடந்த மகாபெரியவா பக்கத்துல இருந்த சிவன் கோயிலுக்குள்ளே நுழைஞ்சார். அவரைக் கொஞ்சமும் எதிர்பார்க்காத கோயில் குருக்கள் அவசர அவசரமாக வரவேற்க ஓடிவந்தார்.

“அதெல்லாம் இருக்கட்டும்.. பிரதோஷ காலம் ஆரம்பிக்கப் போறது.. நீ பூஜை ஆரம்பி.. நான் முழுக்க இருந்து பார்த்துட்டுப் போறேன்!” சொன்ன பரமாசார்யா சுவாமி சன்னதி நேராத் தெரியறாப்புல ஒரு இடத்துல நின்று கொண்டார்.

ஏற்கனவே மகாபெரியவா பின்னாலயே வந்த கூட்டம் அங்கே திரளாகக் கூடி நின்றது. அதோடு பெரியவர் அங்கே இருக்கார் என்று தெரிந்ததும் இன்னும் நிறையப்பேர் வந்ததால் திருவிழா மாதிரி கூட்டம் அலைமோதியது.

குறைவான அபிஷேக ஆராதனைப் பொருட்கள்தான் இருந்தாலும், அதைவைத்து குருக்கள் நந்திக்கும், நாதனுக்கும் பரிபூரணமா அபிஷேக அலங்கார ஆராதனைகள் அத்தனையையும் சிறப்பாக செய்து தீப ஆரத்தி காட்டினார்.

ஆரத்தி ஜோதியை இருந்த இடத்திருந்தே தரிசித்தார் மகாபெரியவர். வந்திருந்த கூட்டம், குருக்கள் காட்டிய ஆரத்தியைத் தொட்டுக் கும்பிட்டு தட்டில் தட்சணை காசுபோட்டனர்.

தொகுப்பு: டாக்டர் துரைஅங்குசாமி

கையில இருந்த சில்லறைக் காசுகளை சிலர் போட்டனர். இன்னும் சிலர், பெரியவா பார்த்துண்டு இருக்கார்ங்கறதால பத்து இருபதுன்னு ரூபாய் நோட்டுக்களைப் போட்டனர்.

எல்லாம் முடிஞ்சு வந்திருந்தவர்களுக்கு பிரசாதம் குடுக்க ஆரம்பிச்சார், குருக்கள்.

முதல் பிரசாதமா விபூதி, வில்வம், புஷ்பத்தை மூங்கில் தட்டுல வைச்சு, மகாபெரியாகிட்டே குடுத்தார்.

மென்மையா அவரைப் பார்த்துப் புன்னகைச்ச மகாபெரியவா, "என்ன..உன்னோட மனோரதம் பூர்த்தியாச்சா? இனிமே எல்லாம் நல்லபடியா நடக்கும்!"னு சொன்னார்.

அவர் சொன்னதைக் கேட்டதும், குருக்களுக்கு அப்படியே கை நடுங்க ஆரம்பித்து விட்டது. கண்ணிலிருந்து நீர் அருவியாகக் கொட்டியது. "பகவானே நான் மனசுக்குள்ளே நினைச்சது உங்களுக்குக் கேட்டுதா?" அப்படின்னு கேட்டுக் கொண்டே மெய்சிலிர்த்து நின்றார்.

பதில் எதுவும் சொல்லாமல் மௌனமாக புன்னகைத்துவிட்டு, கோயிலைப் பிரதட்சணம் பண்ணிட்டுப் புறப்பட்டார் ஆசார்யார்.

அதுக்கப்புறம் அங்கே இருந்தவர்கள் எல்லாரும் குருக்கள்கிட்டே என்ன நடந்ததுன்னு கேட்டனர்.

"ரெண்டு நாள் முன்னால மகாபெரியவாளை தரிசனம் பண்ண வந்தப்போ, அங்கே இருந்த கூட்டத்தைப் பார்த்தேன். பரமேஸ்வரா இந்தக் கூட்டத்துல பத்துல ஒரு பங்கு கோயிலுக்கு வந்தாக்கூட உன்னையும் நன்னா வைச்சுக்கலாம் என்று மனசுக்குள்ளே நினைச்சுண்டேன். சாட்சாத் சர்வேஸ்வரன் கிட்டேதான் நான் அப்படி வேண்டிண்டேன். அந்த பகவானும் நானும் வேற இல்லைங்கறதை உணர்த்தற மாதிரி, இங்கே இத்தனை கூட்டத்தையும் அழைச்சுண்டு வந்து திருவிளையாடல் நடத்திட்டுப் போறார், மகாபெரியவா!" என்று நா தழுதழுக்கச் சொன்னார் குருக்கள்.

திருக்கோயில் பூஜை புனஸ்காரங்கள் செழிப்பாக நடைபெற ஆரம்பித்தது. திருக்கோயிலும் பிரபலமாகிவிட்டது. குருக்களும் மன நிறைவுடன் தன் தெய்வப் பணியைத் தொடர்ந்தார்.

– கருணை மழை பொழியும்..




தமிழக அரசின் சார்பில் நல்லாசிரியருக்கான டாக்டர் இராதாகிருஷ்ணன் விருது தேனி மாவட்டம், சேடபட்டி, ஸ்ரீ மார்க்கண்டேயா நெசவாளர் நடுநிலைப்பள்ளியில் கைத்தொழில் ஆசிரியராகப் பணிபுரியும் நம் இனத்தைச் சேர்ந்த திரு. **ப.உமாபதி** (8 வீடு) அவர்களுக்கு 5-09-2019 அன்று சென்னையில் நடைபெற்ற விழாவில் கல்வி அமைச்சர் மாண்புமிகு கே.செங்கோட்டையன் அவர்கள் வழங்கி கௌரவித்தார்.

# பள்ளிபாளையம் ஸ்ரீ ஓம்காளியம்மன் திருவிழா

நாமக்கல் மாவட்டம் பள்ளிபாளையம் பகுதியில் நமது சமூகத்திற்கு பாத்தியப்பட்ட ஸ்ரீ ஓம்காளியம்மன் கோவிலில் வருடந்தோறும் மாசி மாதத்தில் திருவிழா மிக பிரமாண்டமாக நடைபெறுவது வழக்கம். அதே போல இந்தாண்டும் வழக்கமான உற்சாகத்துடன் கடந்த 25.02.2020 செவ்வாய்கிழமை அன்று இரவு 9 மணிக்கு காவேரிக்கு சென்று தீர்த்தம் எடுத்து வந்து பூச்சாட்டுதலுடன் விழா இனிதே துவங்கியது.



தொடர்ந்து 5ம் கரகம் 29.02.2020 சனிக்கிழமை அன்று நடந்தது. 02.03.2020 திங்கட்கிழமை அன்று மகளிர் அணி சார்பாக தீர்த்தக்குடம் எடுத்தல் நடைபெற்றது. முடிவில் மகளிர் அணி சார்பாக அன்னதானம் வழங்கப்பட்டது.

விழாவின் முக்கிய நிகழ்வான சக்தி அழைத்தல் நிகழ்ச்சி 04.03.2020 புதன்கிழமை அன்று காலை 10 மணிக்கு காவேரிக்கு சென்று தீர்த்தம் எடுத்து கரகம், வேல் பூஜை செய்து நகரின் முக்கிய வீதிகளின் வழியாக ஆடி வந்தனர். இதில் ஜெண்டை, பேண்டு, பறை, நாதஸ்வரம் போன்ற வாத்தியங்கள் முழங்க இளைஞர்கள், பெரியவர்கள், மாணவர்கள் ஆடி தங்களின் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினர். முடிவில் 1 மணிக்கு பொங்கல் வைத்தலும் மாலை 7 மணிக்கு மாவிளக்கு ஊர்வலமும் நடந்தன.



இரவு 9 மணிக்கு சமூகத்தின் சார்பில் ஈரோடு பிரபுவின் பாட்டு பட்டிமன்றம் நடைபெற்றது. 05.03.2020 வியாழக்கிழமை அன்று இரவு 8 மணிக்கு இளைஞர் அணி சார்பில் ஈரோடு பிரகாஷ் வழங்கும் கானா பாய்ஸ் திரைப்பட நடன நாட்டிய நிகழ்ச்சி நடைபெற்றது.

06.03.2020 வெள்ளிக்கிழமை அன்று காலை 9 மணிக்கு 7 குழந்தைகளை தேர்வு செய்து அவர்களுக்கு மஞ்சள் ஆடை அணிந்து கன்னிமார் சுவாமிகள் தீர்த்த குடம் நடைபெற்றது. இதில் ஏராளமான பெண்கள் கலந்து கொண்டனர். தொடர்ந்து 12 மணிக்கு அம்மனுக்கு அபிஷேக பூஜையும், அலங்கார ஆராதனைகளும் நடைபெற்றன.

மதியம் 1 மணிக்கு ஸ்ரீ ஓம்காளியம்மன் சிட்பண்ட்ஸ் நண்பர்கள் சார்பில் 17 ஆண்டாக அன்னதானம் நடைபெற்றது. இரவு 8 மணிக்கு சிம்ம வாகனத்தில் அம்மன் திருவீதி உலா, பவனி வருதல் நடந்தது. இதில் சிலம்பாட்டம், இளைஞர் அணி சார்பாக வானவேடிக்கை நிகழ்ச்சி நடைபெற்றது.

அதிகாலை 4 மணிக்கு ஊஞ்சல் உற்சவம் நடைபெற்றது. 07.03.2020 சனிக்கிழமை அன்று காலை 10 மணிக்கு மஞ்சள் நீராடல் நிகழ்ச்சியுடன் விழா இனிதே நிறைவடைந்தது. விழாவின் அனைத்து நிகழ்வுகளிலும் இனமக்கள் திரளாகப் பங்கேற்று சிறப்பித்தனர்.

14.03.2020 சனிக்கிழமை அன்று இரவு 9 மணிக்கு திருவிழாவின் வரவு, செலவு கணக்குகள் சமர்ப்பிக்கப்பட்டது. விழாவிற்கான ஏற்பாடுகளை பள்ளிபாளையம் 24 மனை தெலுங்கு செட்டியார்கள் சமூகம் மற்றும் கோவில் கமிட்டியார்கள் மிகச் சிறப்பாக செய்திருந்தனர்.

**- அ.சுரேஷ்,**

குலமுரசு நிருபர், பள்ளிபாளையம்.

# உள்ளாட்சி தேர்தலில் வெற்றி பெற்ற நம் இனச் சொந்தங்களுக்கு வாழ்த்துக்கள்!



**M.M.R. துரைசாமி**
15வது வார்டு
கோப்பனூர்புதூர் (செட்டிபுதூர்)
துணைத் தலைவர்,
கிணத்துக்கடவு ஊராட்சி ஒன்றியம்



**ம. சீரங்கராஜ்**
6வது வார்டு
கோப்பனூர்புதூர் (செட்டிபுதூர்)
உபதலைவர்,
கப்பளாங்கரை பஞ்சாயத்து



**பா. காமாட்சி**
5வது வார்டு
கோப்பனூர்புதூர் (செட்டிபுதூர்)
கப்பளாங்கரை பஞ்சாயத்து



**சு. ஜெகதீஸ்வரன்**
7வது வார்டு
கோப்பனூர்புதூர் (செட்டிபுதூர்)
கப்பளாங்கரை பஞ்சாயத்து

**குறிப்பு:** உள்ளாட்சித் தேர்தலில் வெற்றி பெற்ற நம் இனத்தைச் சேர்ந்த வெற்றியாளர்கள் புகைப்படத்தையும் விபரத்தையும் அனுப்பும்படி குலமுரசில் கேட்டிருந்தோம். இதுவரை விவரம் தந்தவர்கள் பட்டியல் இங்கு வெளியிடப்பட்டுள்ளது. மேலும் வெற்றியாளர்கள் தங்களது விவரங்களை குலமுரசிற்குத் தெரிவிக்கவும்.
மின்னஞ்சல்: **24manaikulamurasu@gmail.com** வாட்ஸ்ஆப் எண்: **99 65 900 990**

## பூர்வீக கிராமத்தில் தைப்பூசம்

உடுமலை, ராகல்பாவி கிராமத்தில் 24 மனை தெலுங்கு செட்டியார்கள் சார்பாக 15-2-2020 சனிக்கிழமை அன்று தைப்பூச திருவிழா மிகச் சிறப்பாக கொண்டாடப்பட்டது.

ராகல்பாவியை பூர்விகமாக கொண்ட நமது இன மக்கள் காலத்தால் இடம்பெயர்ந்து பல்வேறு ஊர்களில் இன்று வசிக்கிறார்கள். இருந்தும் 100 ஆண்டுகளுக்கும் மேலாக தை மாதம், தைப்பூச விழாவிற்கு சொந்தங்கள் அனைவரும் ராகல்பாவி பூர்வீக மண்ணில் ஒன்றுகூடி கொண்டாடிக் களிக்கின்றனர். இவ்விழா உறவுகளின் சங்கம விழாவாக சிலிர்ப்புடன் கொண்டாடப்படுகிறது.

பல வண்ண கலர் பொடிகளால் 30 அடி உயரத்தில், முன்னோர் வாழ்ந்த பூமியில், தேர் வரைந்து, நடுவில் முருகக் கடவுளின் திருஉருவத்தை அலங்கரித்து, மா விளக்கு/ பொங்கல் படைத்து, அனைவரும் பகிர்ந்து, பிறகு கும்மியடித்து கொண்டாடி மகிழ்ந்தனர்.

சாக்கு வியாபாரம், வெல்ல வியாபாரம், தரகு வியாபாரம், மாட்டு வண்டிகள், விவசாயம் என பல தொழில்கள் செய்து செழிப்புடன் புகழ் கொண்ட பரம்பரையின், இன்றைய சந்ததிகள் இணையும் பாரம்பரிய விழாவை - பல தலைமுறைகள் கடந்தும் கொண்டாடி தெலுங்கின மரபைப் பேணும் ராகல்பாவி வம்சத்தினரை நமது குலமுரசு இதழின் சார்பாக வாழ்த்துகிறோம்.



தகவல்: **R.V.S.ஆறுமுகம்,** உடுமலைப்பேட்டை.





# காஞ்சி காமாட்சி அம்பாள் பிரம்மோத்ஸவம்

நமது 24 மனை தெலுங்குச் செட்டியார்கள் சமூகத்தின் இனதெய்வமாகிய காஞ்சிபுரம் ஸ்ரீ அன்னை காமாட்சி அம்மன் பிரம்மோத்ஸவ விழா கடந்த 28-02-2020 அன்று வெள்ளிக்கிழமை கோலாகலமாக நடைபெற்றது.

விழாவின் முதல் நாள் அன்று மாலை 6:30 மணியளவில் காமாட்சி அம்பாள் தங்க மான் வாகனத்தில் அமர்ந்து, மேளதாளம், வாண வேடிக்கையுடன காஞ்சி மாநகரின் முக்கிய வீதி களில் உலா வந்து பக்தர்களுக்கு அருள்பாலித்தார்.

ஸ்ரீ காமாட்சி அம்பாள் தேவஸ்தானம் வருடம் தோறும் நடத்தும் இந்த பிரம்மோத்ஸவ விழாவில் மான் வாகன உபயதாரர்களாக பங்கேற்று 24 மனை தெலுங்குச் செட்டியார்கள் சமூகத்தினைச் சேர்ந்த மக்கள், வாழ்வில் எல்லா வளமும் பெற்று மேன்மை அடையவேண்டும் என்ற காஞ்சி பெரியவாளின் விருப்பத்தினை ஏற்று சென்னை பார்டர் தோட்டம் 24 மனை தெலுங்குச் செட்டியார்கள் சமூகத்தின் ஸ்ரீ அன்னை காமாட்சி அம்மன் டிரஸ்ட் நெ. 11, 12, L.G.N. ரோடு, சென்னை - 2-ன் நிர்வாகிகள் கடந்த 42 ஆண்டுகளாக நடத்தி வந்துள்ளனர். அதுபோன்றே இவ்வாண்டும் 43வது ஆண்டாக டிரஸ்ட் நிர்வாகத்தின் தலைவர் திரு. N.P.ஆறுமுகம், துணைத் தலைவர் K.துரைராஜ், செயலாளர் திரு. V.கோவிந்தராஜன், பொருளாளர் திரு. K.செல்லமுத்து மற்றும் ஆலோசகர்கள் திரு. V.V.R.வெங்கடாசலம், திரு. P.சண்முகம், திரு. N.பழனிச்சாமி ஆகியோர் விழாவிற்கான ஏற்பாடுகளை சிறப்பாக செய்திருந்தனர்.

பார்டர் தோட்டத்தில் இருந்து காஞ்சிபுரம் சென்றுவர பேருந்து வசதியினை திரு. P.S.சக்திவேல், திரு. K.R.A.சீனிவாசன், G.சுப்பிரமணி (குருநாதன்), திரு. K.S.P.சரவணன் ஆகியோரும், வருகை புரிந்த அனைத்து மக்களும் தங்குவதற்கு யாத்ரி நிவாஸ் திருமண மண்டபம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

அனைத்து பக்தர்களுக்கும் மதியம், மாலை, இரவு சிறப்பான உணவு ஏற்பாடுகளை திரு.V.V.R.வெங்கடாசலம் மற்றும் அவரது சகோதரர்கள் குடும்பத்தினர் செய்திருந்தனர்.

கலந்து கொண்ட அனைத்து மக்களம் மனநிறைவோடு அம்பாளை தரிசித்து பிரசாதம் பெற்றுச் சென்றனர்.

செய்தித் தொகுப்பு: **S.சிவனேஸ்வரன்,**
குலமுரசு நிருபர், பார்டர் தோர்ட்டம், சென்னை.







# உறையூர் ஸ்ரீ அங்காளபரமேஸ்வரி அம்மன் திருக்கோயில்

# மகா கும்பாபிஷேக விழா

திருச்சிராப்பள்ளி உறையூர் வாஜ்யவர் - இரட்டையவர் இரு குலங்களின் குலதெய்வமான ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி அம்மன் திருக்கோவிலின் மகாகும்பாபிஷேகப் பெருவிழா 2020 பத்திரிகை நிகழ்வுகளின்படி 5-02-2020 புதன்கிழமை காலை 7:00 மணியளவில் காவிரி ஆற்றில் அய்யாளம்மன் படித்துறையிலிருந்து மகா தீர்த்தக் குடங்கள் மற்றும் முளைப்பாரிகள், கோவில் அறக்கட்டளைத் தலைவர் திரு. டாக்டர் S.அப்புஸ்வாமி, செயலாள்ர திரு. டாக்டர் V.N.பாலசுப்ரமணியன், பொருளாளர் திரு. V.தண்டாயுதம் அவர்களின் தலைமையிலும் குலமக்களின் பக்தி பங்களிப்போடும் கோவிலுக்கு இனிதே எடுத்து வரப்பட்டது.

காலை 9:00 மணிக்கு கணபதி பூஜை, புண்யாக பஞ்சகவ்ய பூஜை, ஸ்ரீதனலெட்சுமி பூஜை, கஜபூஜை மற்றும் வாஸ்து சாந்தி நடைபெற்றது. பின்னர் மாலை 6:00 மணியளவில் முதல் கால யாக பூஜைகள் ஆரம்பித்தன. அதனைத் தொடர்ந்து பூர்ணாஹுதி மற்றும் தீப ஆராதனைகள் இரவு 9:00 மணியளவில் நடைபெற்றது. பிரசாதங்கள் மற்றும் அன்னதானங்கள் வழங்கப்பட்டன.

மறுநாள் 6-02-2020 வியாழக்கிழமை காலை 8:00 மணியளவில் இரண்டாம் கால யாக சாலை பூஜைகள் தொடங்கி மதியம் 1:00 மணியளவில் பூர்ணாஹுதி மற்றும் தீப ஆராதனைகள் நடைபெற்று பிரசாதம் வழங்கப்பட்டது. அன்று மாலை 6:00 மணிக்கு மூன்றாம் கால யாக பூஜைகள் நடைபெற்றன.

7-02-2020 வெள்ளிக்கிழமை காலை 6:00 மணிக்கு நான்காம் கால யாகபூஜைகள் நடைபெற்றன. காலை 8:30 மணியளவில் மஹா பூர்ணாஹுதி மற்றும் தீப ஆராதனைகள் நடைபெற்றன. காலை 7:30 மணியளவில் யாக சாலைகளிலிருந்து வேதங்கள் முழங்க, கும்பங்கள் புறப்பட்டு கோபுரங்களுக்கு சென்றடைந்தன. சரியாக காலை 9:45 மணிக்கு ஸ்ரீ அம்மன் கோபுரம், பரிவார தெய்வங்களின் கோபுரங்கள் மற்றும் இராஜ கோபுரத்திற்கு சமகாலத்தில் மஹாகும்பாபிஷேகம் இனிதே நடைபெற்றது. அதனைத் தொடர்ந்து









அனைத்து கோபுரங்களுக்கும் தீபாராதனைகள் நடைபெற்றன.

காலை 10:00 மணியளவில் மூலஸ்தானம் ஸ்ரீ அங்காளபரமேஸ்வரி அம்மன், பாலகுருநாதர் மற்றும் பூங்காவனத்தம்மன் பரிவார தெய்வங்களுக்கு சம காலத்தில் மஹா அபிஷேகங்கள் மற்றும் தீபாராதனைகள் நடைபெற்று பிரசாதம் வழங்கப்பட்டது.

நான்கு காலங்களுக்கும் சதுர்வேத திருமுறைப் பாராயணம் சிறப்பாக நடைபெற்றது. மஹா கும்பாபிஷேகப் பெருவிழாவிற்கு வருகை புரிந்த சிறப்பு அழைப்பாளர்கள் தமிழக சட்டமன்ற துணை சபாநாயகர் மாண்புமிகு பொள்ளாச்சி V.ஜெயராமன் அவர்கள், சுற்றுலாத்துறை அமைச்சர் மாண்புமிகு வெல்லமண்டி N.நடராஜன் அவர்கள், மாவட்ட ஆட்சித்தலைவர் அவர்கள், மாநகராட்சி ஆணையர் அவர்கள், 24 மனை தெலுங்கு செட்டியார்கள் தலைமை சங்கத் தலைவர் திண்டுக்கல் R.நடராஜன் அவர்கள், காஞ்சி காமாட்சி அறக்கட்டளை நிறுவனர் மதுரை டாக்டர் V.V.முத்துசாமி அவர்கள், தலைமைச் சங்க பொருளாளர் சென்னை திரு. M.G.ராமச்சந்திரன் அவர்கள், திருச்சி திரு. S.A.தண்டபாணி அவர்கள், திருச்சி ஆவின் சேர்மன் திரு. C.கார்த்திகேயன், பெரம்பலூர் திரு. T.வடமலை மற்றும் இனப் பெரியோர்கள், கோவில் குலமக்கள், உறவினர்கள், பொதுமக்கள் அனைவரும் கலந்துகொண்டு சாமி தரிசனம் செய்து விழாவினை சிறப்பித்தார்கள்.

இந்த மஹாகும்பாபிஷேகப் பெருவிழாவினை ஆகம விதிகளின்படி யாகசாலை பூஜைகள் மற்றும் சிறப்பு அபிஷேகங்கள் அனைத்தையும் நடத்திய ஸ்ரீ ரங்கம் இராஜஞானஸ்கந்த சிவாச்சாரியார், ஸ்தபதியார் மாதிரி மங்களம் (நாகை) திரு. R.கோவிந்தராஜ் அவர்கள், காவல்துறையினர், மாநகராட்சி அலுவலர்கள், ஊழியர்கள், உபயதாரர்கள் பொருளுதவி செய்த பொதுமக்கள் மற்றும் அறங்காவலர்கள், ஒருங்கிணைப்பாளர்கள் அனைவருக்கும் மனமார்ந்த நன்றிகளை அறக் கட்டளையின் தலைவர் டாக்டர் S.அப்புஸ்வாமி, செயலாளர் டாக்டர் V.N.பாலசுப்ரமணியன், பொருளாளர் V.தண்டாயுதம் ஆகியோர் தெரிவித்தனர்.

இக்கும்பாபிஷேக விழாவிற்கு வருகை தந்த அனைத்து குலமக்களும், பொதுமக்களும் இனிய சுவைத்து மகிழ மூன்று தினங்களும் கலை நிகழ்ச்சிகள் நடத்தப்பட்டன.

5-02-2020 புதன்கிழமை காலை 6 மணியளவில் அந்தியூர் N.S.கலைவாணர்









கலைக்குழுவினரின் அடி 50 இடி 50 அதிரடி மேள வாத்தியம், மாலை டாக்டர் புஷ்பவனம் குப்புசாமி - திருமதி அனிதா குப்புசாமி குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சியும், 6-02-2020 வியாழக்கிழமையன்று ஸ்ரீ குருமண்டலம் வீரமணிதாசன் அய்யா அவர்களின் பக்தி இன்னிசை நிகழ்ச்சி மற்றும் 7-02-2020 வெள்ளிக்கிழமை காலை 11 மணிக்கு திரு. S.ராஜா மற்றும் குழுவினரின் தலைமையில் சிறப்பு பட்டிமன்றமும், நாதஸ்வரம் திருமங்கலம் திரு. பி.ஆனந்தன் குழுவினரின் மேள வாத்தியங்கள் நடைபெற்றது.

செய்தித் தொகுப்பு: **டாக்டர் V.N.பாலசுப்ரமணியன்,**
அறக்கட்டளை செயலாளர்





# 24 மனை குலமுரசு

## ஆண்டு சந்தா ரூ. 200/- மட்டுமே

## சந்தா செலுத்துவது எப்படி?

**A/c Name : 24 MANAI KULAMURASU**
**SB A/c. No. : 1650101014869**
**BANK : CANARA BANK**
**BRANCH : KILPAK, CHENNAI**
**IFS Code : CNRB0001650**

மேற்கண்ட 24 மனை குலமுரசு இதழின் கனரா வங்கி சேமிப்புக் கணக்கில் ரூ 200/- ஆன்லைன் மூலம் செலுத்தி பரிமாற்ற விபரத்தை (Transaction ID Details) ஸ்கிரீன்ஷாட் நகலுடன் உங்கள் பெயர், முகவரி, பின்கோட், செல்பேசி எண் குறிப்பிட்டு **kulamurasuoffice@gmail.com** என்ற மின்னஞ்சல் முகவரிக்கு அல்லது **9965900990** என்ற வாட்ஸ்அப் எண்ணுக்கோ அனுப்பிவிட்டு தகவல் தெரிவிக்கவும் அல்லது ஏதாவது ஒரு வங்கியில் ரூ.200/-க்கு **24 Manai Kulamurasu, Chennai-10** என்ற பெயரில் **DD** எடுத்து அத்துடன் ஒரு வெள்ளைத் தாளில் உங்கள் பெயர், முகவரி, பின்கோட் மற்றும் செல்பேசி எண் எழுதி கீழ்க்கண்ட நிர்வாக அலுவலக முகவரிக்கு தபாலில் அனுப்பவும்.

**24 மனை குலமுரசு,**
330/1, சின்னாண்டான் கோவில் வீதி,
கரூர் - 639001.
**செல்பேசி: 9965 900 990**

* வங்கிக் கணக்கில் பணம் செலுத்தியவர்கள் பரிமாற்ற விபர நகலை, முகவரி, செல்போன் எண் குறிப்பிட்டு **kulamurasuoffice@gmail.com** மின்னஞ்சல் முகவரிக்கு அல்லது கரூர் நிர்வாக அலுவலகத்திற்கோ அல்லது 9965 900 990 என்ற வாட்ஸ்அப் எண்ணுக்கோ மட்டுமே அனுப்பவேண்டும்.
* தபால் மூலம் சந்தா விபரத்தை அனுப்புபவர்கள் பிரதி மாதம் 1-ஆம் தேதிக்குள் எங்களுக்குக் கிடைக்கும் படி அனுப்பினால், அந்த மாதத்திலிருந்து குலமுரசு அனுப்பி வைக்கப்படும். பிரதி மாதம் 2-ஆம் தேதிக்கு பிறகு கிடைக்கும் தபால்களுக்கு அடுத்த மாதத்திலிருந்து குலமுரசு அனுப்பி வைக்கப்படும்.
* மின்னஞ்சல் மற்றும் வாட்ஸ்அப் மூலம் விபரங்களை அனுப்புகிறவர்கள் பிரதி மாதம் 5ஆம் தேதிக்குள் அனுப்பிவிட்டு தகவல் தெரிவிக்கவும்.

# கொமாரபாளையம் ஸ்ரீமாரியம்மன் கோவில் மாசி திருவிழா

நாமக்கல் மாவட்டம், கொமாரபாளையம் பகுதியில் 24 மனை தெலுங்கு செட்டியார்கள் சமுதாய அறக்கட்டளைக்கு பாத்தியப்பட்ட அருள்மிகு ஸ்ரீ மாரியம்மன் கோவில் மாசி திருவிழா இந்தாண்டும் மிக சிறப்பாக நடைபெற்றது.

கடந்த 25.2.2020 செவ்வாய்க்கிழமை அன்று காலை 5 மணிக்கு புண்ணியார்ச்சனை செய்து கணபதி ஹோமம் செய்து கொடியேற்றுதலுடன் பூச்சாட்டுதலும் நடந்தன. பிறகு 9 மணிக்கு பவானி கூடுதுறைக்கு சென்று ஸ்ரீ மாரியம்மனுக்கு தீர்த்த குடம் எடுத்து வந்து அபிஷேகம் செய்தனர். இரவு 7 மணிக்கு கம்பம் நடப்பட்டது.

29.2.2020 சனிக்கிழமை 8.30 மணிக்கு பூவோடு வைத்தலும், 04.03.2020 புதன்கிழமை அன்று காலை 9 மணிக்கு காவேரி நதியில் இருந்து சக்தி அழைத்தலும், பிறகு பொங்கல் வைத்து சிறப்பு வழிபாடுகள் நடைபெற்றன.

05.03.2020 வியாழக்கிழமை இரவு 7 மணிக்கு கம்பத்தை காவேரி ஆற்றில் விடும் நிகழ்வும், 06.03.2020 வெள்ளிக்கிழமை இரவு 7 மணிக்கு காவேரி ஆற்றிலிருந்து அக்னி சட்டி எடுத்தலும் நடந்தன. 07.03.2020 சனிக்கிழமை காலை 9 மணிக்கு மஞ்சள் நீராட்டு நிகழ்வுடன் விழா நிறைவடைந்தது.

25.02.2020 முதல் 09.03.2020 வரை தினசரி ஸ்ரீ மாரியம்மனுக்கு அபிஷேக ஆராதனை கட்டளை தாரர்கள் மூலம் சிறப்பாக நடைபெற்றது. மும்முடி யர், வாட்சியவர், மக்கடையவர், வம்மையவர், குரகையர் போன்ற கோத்திரதாரர்களின் சார்பில் திருவிழா நாட்களில் சிறப்பு அலங்காரம் சிறப்பு பூஜைகள், சிறப்பு ஆராதனைகள் அன்னதானத்துடன் நடைபெற்றது.





அக்னிசட்டி, தீர்த்தக்குடம், ஸ்ரீ நித்திய சுமங்கலி அம்மன், ஸ்ரீ பட்டத்தரசி அம்மன், ஸ்ரீ சக்தி முருகன், ஸ்ரீ குபேரலட்சுமி போன்ற சாமிகளின் அலங்காரம் செய்யப்பட்டு ஸ்ரீ மாரியம்மனுக்கு அழகுக்கு மேல் அழகு சேர்த்து பார்ப்போரை பரவசப்படுத்தினர்.

07.03.2020 சனிக்கிழமை அன்று ஸ்ரீ மாரியம்மன் இளைஞர் நற்பணி மன்றம் சார்பில் ஈரோடு நியூ குறிஞ்சி மலர் எனும் பல்சுவை நிகழ்ச்சி நடைபெற்றது.

விழா நிகழ்வுகளில் நமது இனமக்கள் பல்லாயிரக்கணக்கானோர் கலந்து கொண்டு சிறப்பித்தனர். விழாவிற்கான ஏற்பாடுகளை கொமாரபாளையம் 24 மனை தெலுங்கு செட்டியார்கள் தேவஸ்தான டிரஸ்ட் சமுதாய அறக்கட்டளையின் நிர்வாகக் குழு தலைவர் ஜெட் N.ஜெகதீசன், செயலாளர் M.சுப்பிரமணியம், பொருளாளர் S.தண்டபாணி, உபதலைவர்கள், உபசெயலாளர்கள், உபபொருளாளர்கள், ஆவணம் மற்றும் பொருள் பாதுகாப்பாளர், செயற்குழு உறுப்பினர்கள் என அனைவரும் நிகழ்ச்சியை மிகச் சிறப்பாக செய்திருந்தனர்.

# இந்து சமய அறநிலையத் துறை இணை ஆணையர் திரு. கே.ராஜமாணிக்கம் பணி நிறைவு பாராட்டு விழா

நமது 24 மனை தெலுங்கு செட்டியார் சமூகம் 8 வீடு மக்கடையார் குலத்தைச் சேர்ந்தவர் திரு. K.ராஜமாணிக்கம். இவரது பூர்வீகம் திருப்பூர் மாவட்டத்தைச் சேர்ந்த சாலையூர் ஆகும்.

இவரது துணைவியார் திருமதி. லதா ராஜமாணிக்கம் அவர்கள் பொள்ளாச்சி பொதுப்பணித் துறையில் உயர் பதவி வகிக்கிறார்.

இவர்களுக்கு கோகுல் என்ற மகனும், ஸ்ரீவர்சா என்ற மகளும் உள்ளனர்.

1987ம் ஆண்டு மருத்துவத் துறையில் தனது அரசுப் பணியை துவக்கிய திரு. K.ராஜமாணிக்கம் அவர்கள் 11 வருடங்கள் மருத்துவத் துறையில் பணியாற்றி பிறகு, சட்ட மேற்படிப்பு படித்து 1998ம் ஆண்டு தமிழ்நாடு இந்து சமய அறநிலையத் துறையில் பணியில் சேர்ந்தார்.

ஈரோடு மாவட்டம் பாரியூர் கொண்டத்துக் காளியம்மன் கோவிலின் செயல் அலுவலராக தனது பணியைத் தொடங்கினார். தொடர்ந்து ஆனைமலை அருள்மிகு மாசாணியம்மன் கோவில், ஸ்ரீ வில்லிப்புத்தூர் ஆண்டாள் கோவில், மதுரை ஸ்ரீ மீனாட்சி அம்மன் கோவில், பழனி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் எனப் பல்வேறு முக்கியத் திருக்கோயில்களில் செயல் அலுவலராக சிறப்புடன் பணியாற்றினார்.

பழனி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் செயல் அலுவலர் / இணை ஆணையராக 7 ஆண்டுகளுக்கு மேல் தொடர்ந்து பணியாற்றி ஒரு புதிய சாதனையைப் படைத்துள்ளார்.

தனது 33 ஆண்டுகால அரசுப் பணிக் காலத்தை சிறப்பாக முடித்து 29.2.2020 சனிக்கிழமை அன்று பணி நிறைவு பெற்றார்.

இவரது பணி நிறைவு விழா கடந்த 28.02.2020, 29.02.2020 ஆகிய இரண்டு நாட்கள் கோவையில் நடைபெற்றது. இதில் நமது சமூகத்தைச் சேர்ந்தவர்கள், உறவினர்கள், நண்பர்கள், இந்து சமய அறநிலையத் துறையைச் சார்ந்த உயரதிகாரிகள், அரசு ஊழியர்கள், பொது மக்கள் என அனைவரும் பணி நிறைவு பெறும் இணை ஆணையர் திரு. K.ராஜமாணிக்கம் அவர்களை சால்வைகள் அணிவித்தும், மலர்ச்செண்டுகள் தந்தும், நினைவுப் பரிசுகள் அளித்தும் அவரைப் பாராட்டி மகிழ்ந்தனர்.

நமது குல முரசு இதழின் சார்பிலும், நமது சமுதாயத்தின் சார்பிலும் அவரது பணி ஓய்வுக் காலம் நிறைவுடனும், செறிந்த மகிழ்ச்சி யுடனும் திகழ மனமினிக்க வாழ்த்துகிறோம்.

**– அ.சுரேஷ்,** குலமுரசு நிருபர்,

பள்ளிபாளையம்.

# பங்குனி உத்திரம்

பங்குனியில் மரங்களும் செடிகளும் பூத்துக் குலுங்குகின்றன. பனிதரும் குளிர்ச்சியும், சூரிய ஒளிதரும் வெப்பமும் இதமாகவும், பதமாகவும் உள்ளன. தமிழ் நூல்கள் இம்மாதத்தைப் பங்குனிப் பருவம் என்றும், இதில் கொண்டாடப்படும் வசந்த விழாவைப் பங்குனி விழா என்றும் சிறப்பித்துக் கூறுகின்றன. பங்குனி உத்திரம் பற்றிய சிலிர்ப்பான, சிறப்பான தகவல்கள்:

## சிறப்பான 20 தகவல்கள்

1. ஒவ்வொரு மாதத்திலும் ஒவ்வொரு நட்சத்திரத்திற்கு முக்கியத்துவம் கொடுத்து விழாக்கள் நடத்துவது வழக்கம். அதில் பங்குனி உத்திர நட்சத்திரத்துக்கு அதிக மகத்துவம் உண்டு. இந்தத் திருநாளில்தான் மிக அதிக மான தெய்வத்திருமணங்கள் நடைபெற்றுள்ள தாகப் புராணங்கள் கூறுகின்றன.
2. 12-வது மாதமான பங்குனியும், 12-வது நட்சத்திரமான உத்திரமும் இணையும் புனித நாள் பங்குனி உத்திரம்
3. இந்த விரதத்தை கல்யாண விரதம், திருமண விரதம் என்றும் கூறுவார்கள்.
4. சிவபெருமான் அன்னை பார்வதியோடு மணக்கோலத்தில் சுந்தரமூர்த்தி நாயனாருக்கு மதுரையில் காட்சி தந்தருளிய திருநாள் இதுதான். அன்னை மீனாட்சியைத் திருமணம் செய்து மீனாட்சி சுந்தரேஸ்வரராகக் காட்சி தந்ததும் இந்நாளில்தான். ஆண்டு தோறும் மதுரையில் இத்திருமண விழாவை பங்குனி உத்திரத்தன்று சிறப்பாக நடத்துகின்றனர்.
5. சிவனின் தவத்தைக் கலைத்தால் இறைவனின் நெற்றிக் கண்ணால் மன்மதன் எரிக்கப்பட்டான். ரதியின் வேண்டுதலால் மீண்டும் மன்மதன் உயிர் பெற்ற நாளும் இதுதான்.
6. காஞ்சியில் காமாட்சி - ஏகாம்பரேஸ்வரர் திருமண விழா நடைபெறும்போது, அதே மண்டபத்தில் ஏராளமானோர் திருமணம் செய்து கொள்வார்கள்.
7. முருகன் தெய்வானையை இந்த நாளில் தான் திருமணம் புரிந்து கொண்டார். அத்துடன் வள்ளியின் அவதார தினமும் இதுதான்



8. பர்வத ராஜன் தவத்தால் பத்மத்தில் அவதரித்த பார்வதியை சிவபெருமான் கரம் பிடித்த நாளும் இதுவே.
9. ஸ்ரீரங்க மன்னார்- ஆண்டாள் திருக்கல்யாண வைபவம் நடந்த நாளும் இதுதான். மகாலட்சுமி பங்குனி உத்திர விரதத்தை அனுசரித்துதான் ஸ்ரீமகா விஷ்ணுவின் மார்பில் உறையும் பாக்கியம் பெற்றாள்.
10. இந்நாளில் வைணவ ஆலயங்களில் மணக்கோலத்தில் தாயாரும் திருமாலும் காட்சி தருவார்கள். அன்று காஞ்சிவரதராஜர் ஆலயத்தில் ஸ்ரீபெருந்தேவித் தாயார் சந்நிதியில் ஸ்ரீதேவி பூதேவி, மலையாள நாச்சியார் ஆண்டாள் மற்றும் பெருந்தேவித் தாயார் சகிதமாக ஸ்ரீவரதராஜர் காட்சி தருவார்.

11. மகாலட்சுமியின் அவதார நாளும் பங்குனி உத்திர நாள்தான்.

12. தேவேந்திரன்- இந்திராணி, நான்முகன்- கலைவாணி திருமணங்களும் பங்குனி உத்திரத்தன்றுதான் நடைபெற்றன.

13. தசரத மைந்தர்கள் ஸ்ரீராமன் - சீதை, லட்சுமணன்- ஊர்மிளா, பரதன்-மாண்டவி, சத்ருக்னன்- ஸ்ருதகீர்த்தி திருமணங்களும் பங்குனி உத்திரத்தன்றுதான் ஒரே மேடையில் மிதிலையில் நடைபெற்றது குறிப்பிடத்தக்கது.

14. அழகுமிகு 27 கன்னியர்களை சந்திரன் மனைவி களாக ஏற்றுக் கொண்ட தினமும் இதுதான்.

15. பங்குனி உத்திரத்தன்று சில கோவில்களில் தீர்த்தவாரியும் நடைபெறும். அப்போது அந்த தலங்களில் உள்ள கடல், ஏரி, ஆறு, குளம், கிணறு போன்றவற்றில் புனித நீராடினால் புண்ணியம் கிடைக்கும்.

16. பங்குனி உத்திரத்தன்று கன்னிப் பெண்கள் கல்யாண விரதம் கடைப்பிடித்து அருகே உள்ள ஆலயங்களில் திருமணக்கோல தெய்வங் களைத் தரிசித்தால் அவர்களுக்கும் கல்யாண வைபோகம் தான். அது போல திருமழப்பாடியில் நந்திக் கல்யாணம் கண்டால் முந்திக் கல்யாணம்தான்.

17. பங்குனி மாதத்தில் ஏற்றிய தீபத்தில் சிவனும் பார்வதியும் ஐக்கிய சொரூபமாகக் காட்சி தருகின்றனர். அதனால் அன்று திருவிளக்கு பூஜை செய்து பாவங்களை விலக்கி, பகை அகற்றி புண்ணியம் பெறலாம்.

18. காரைக்கால் அம்மையார் முக்தியடைந்த தினமும் பங்குனி உத்திரம்தான், அன்று தண்ணீர்ப்பந்தல் வைத்து நீர்மோர் தானம் தருவது மிகவும் புண்ணியம்.

19. 48 ஆண்டுகள் பங்குனி உத்திர விரதம் இருந்தவர்களின் மறு பிறவி தெய்வத் பிறவியாக அமையும்.

20. இந்த திருநாளில் லோபமுத்திரை அகத்திய முனிவரையும், திருமாலின் புதல்விகளான அமிர்தவல்லியும் சுந்தரவல்லியும் தேவயானை வள்ளியாகப் பிறவி எடுத்து முருகனையும் மணந்து கொண்டனர். பூரணா, பூஷ்கலா ஐயப்பனையும் ரதி மன்மதனையும் கல்யாணம் செய்து கொண்டனர் என்று சுந்தபுராணம் கூறுகிறது.

# மணக்கோலம்

## கட்டணமில்லாத இலவச சேவை

1. 24 மனை குலமுரசின் மணக்கோலம் பகுதி வெளிப்படையானது. வரன் வேண்டுவோர் பயன்பாட்டிற்கான இலவசச் சேவை இது. வணிக நோக்குடையவர்கள் - இடைத்தரகர் கள் எந்த நிலையிலும் மணக்கோலம் பகுதியைப் பயன்படுத்தக் கூடாது.
2. மணக்கோலம் பகுதிக்கு விண்ணப்பிப்பவர் கள் குலமுரசு சந்தா தாரர்களாக வேண்டும்.
3. வரன் தகவல்கள் 3 மாத இதழ்களில் மட்டுமே வெளியிடப்படும். ஏராளமானவர்கள் விண் ணப்பம் செய்வதால் தொடர்ந்து வெளியிட இயலவில்லை. 3 மாதங்களுக்குப் பிறகு மீண்டும் விண்ணப்பம் தந்தால் மறு படியும் 3 மாதங்களுக்கு வெளியிடப்படும்.
4. வரன்களுக்கு திருமணம் நிச்சயமாகிவிட் டால் உடனடியாகத் தெரிவிக்க வேண்டும்.
5. மணக்கோல விண்ணப்ப மாதிரிப் படிவம்

1. பெயர் ....................................................
2. படிப்பு ....................................................
3. பணி .................   4.வருமானம் ...........
5. வீடு 8 / 16   6. குலம் ..................
7. பிறந்தநாள் .......................................
8. ராசி. ....................   9.நட்சத்திரம்.........
10. பெற்றோர் பெயர் ............................
11. ஊர் ..... ...........................................
12. தொலைபேசி எண்: .........................

மேற்கண்ட அனைத்துத் தகவல்களுடன் குலமுரசுக்கு சந்தா செலுத்தியதற்கான DD அல்லது செலானையும் ஸ்கேன் செய்து

**manakolam24@gmail.com**

என்ற மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்பிவைக்கவும்.



# வாசகர் குரல்

வாசகர்களின் விமர்சனங்கள் வரவேற்கப்படுகின்றன. வாசகர்கள் எழுதும் நிறை, குறை அனைத்தும் ஒளிவுமறைவின்றி வெளியிடப்படும்.

கடந்த மாத குலமுரசின் அட்டையில் வெளிவந்த அங்காளம்மன் படம் எங்களை மெய்சிலிர்க்க வைத்தது. எங்களது குலதெய்வம் அங்காளம்மன் என்பதாலும் மாசி மகா சிவன் ராத்திரியை ஒட்டி குலமுரசு வந்ததாலும் நாங்கள் மிகவும் சந்தோஷமும் பரவசமும் அடைந்தோம்.

**– கனகவல்லி அங்குராஜ்,** திண்டுக்கல்.

ᘓ ᘓ ᘓ

காஞ்சி மகாப்பெரியவர் பற்றி கவியரசு கண்ணதாசன் கூறியவற்றை அழகாகத் தொகுத்து தந்துள்ளீர்கள். ஆன்மிகச் சுவை நிறைந்த அருமையான கட்டுரை. இந்து மதம் என்றால் எதிர்கால மாணவன் 'மகாப்பெரியவர்' என்று பதில் எழுதுவான் என்ற கவிஞரின் வார்த்தைகள் தீர்க்கதரிசனமானவை. குலமுரசு ஆசிரியர் இதை வெளியிட்டதற்காக அவரை வணங்குகிறேன்..

**– R.V.வெங்கடேசன்,** செங்கல்பட்டு.

ᘓ ᘓ ᘓ

காஞ்சி ஆராதனை விழா நிகழ்ச்சிகளையும், காஞ்சி சண்டி ஹோமம் நிகழ்ச்சிகளையும் அழகாகப் படம் பிடித்துக் காட்டியுள்ளீர்கள். இந்த 2 விழாக்களின் நிகழ்வுகளை ஆசிரியர் எழுதாமல் அந்தந்த விழா நடத்துபவர்களைக் கொண்டு எழுத வைத்து உங்கள் மீது குறை வராமல் பார்த்துக் கொண்டீர்கள். இரு விழாக்கட்கும் 1 கலர் பக்கம் 3 கருப்பு வெள்ளை பக்கம் என்று சரிசமமாக ஒதுக்கி விட்டீர்கள். ஆனால் முன்னால் நடந்த சண்டி ஹோமம் நிகழ்ச்சி செய்திகளைப் பின்னால் போட்டு பின்னால் நடந்த ஆராதனை விழா செய்திகளை முன்னால் போட்டுள்ளீர்களே! இது சரியா?

**– R.N.ரத்னகுமார்,** நஞ்சுண்டாபுரம், கோவை.

ᘓ ᘓ ᘓ

எங்கள் குலதெய்வம் அங்காளபரமேஸ்வரி. எங்களுக்கு மூலஸ்தானம் 'மலையனூர் அங்காளம்மன்' என்று எங்கள் மூதாதையர்கள் சொல்லியிருக்கிறார்கள். மலையனூர் கோயிலுக்குப் போய் தரிசனம் செய்ய வேண்டும் என்ற ஆவலை குலமுரசு உண்டாக்கிவிட்டது. சந்தோஷம்.

**– V.பெரியசாமி செட்டியார்,** பெருந்தலைமன்னா, மலப்புரம் மாவட்டம், கேரளா.

ᘓ ᘓ ᘓ

குலமுரசின் மணக்கோலம் பகுதியில் என் மகனின் பெயர் வந்து கொண்டிருக்கிறது. இதில் வரும் எங்களது எண்ணிற்கு மதுரை, திருச்சி, சேலம், தேனி பகுதியிலிருந்து பேசுகிறோம் என்று சிலர் அழைத்து, உங்களுக்குப் பொருத்தமான ஜாதகங்கள் நான்கு, ஐந்து உள்ளது, தபாலில் அனுப்புகிறோம். தபால்காரரிடம் ரூ.400 பணம் செலுத்திப் பெற்றுக்கொள்ளுங்கள் என்கிறார்கள். நீங்கள் யார் என்று கேட்டால், நாங்கள் கிளை அலுவலகம் என்று ஒருவரும், செட்டியார்கள் சங்கம் என்று ஒருவரும் மாற்றி மாற்றிப் பேசுகின்றனர். இதன் மீது தாங்கள் உரிய நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

**– M.தேவராஜன்,** சென்னை.

ᘓ ᘓ ᘓ

குலமுரசில் வெளிவரும் மணக்கோலம் பகுதி வரன்களின் ஜாதகங்களை கம்ப்யூட்டரில் பிரிண்ட் எடுத்துக் கொண்டு நாங்கள் குலமுரசின் பிரதிநிதி என்று கூறி சில திருமண புரோக்கர்கள் எங்களைத் தொடர்பு கொண்டனர். அவர்கள் போலிகள் என்பது எங்களுக்குப் புரிந்து, தவிர்த்து விட்டோம். தாங்கள் புரோக்கர்கள் குறித்தான எச்சரிக்கையை வெளியிட வேண்டும் எனக் கேட்டுக் கொள்கிறேன்.

**– V.K.ராஜ்ஆனந்த்,** சூலூர், கோவை.

தங்களைப் போன்றே வேறு பல சந்தாதாரர்களும் குலமுரசின் சந்தாதாரர் சேவை எண்ணிற்கு தொடர்பு கொண்டு புகார் தெரிவித்தனர். குலமுரசில் வெளியிடப்படும் வரன் விபரங்களை வேறு எவரிடமும் நாங்கள் பகிர்வதில்லை. எங்களுக்கு கிளை அமைப்புகள் என்று எதுவும் இல்லை. இதுபோன்ற சுயலாப நோக்கத்தில் செயல்படும் திருமண புரோக்கர்களிடமிருந்து வரும் அழைப்புகளை நிராகரியுங்கள். வரன் தொடர்பானவர்கள் பேசும்போது மட்டும் நன்கு விசாரித்து விபரங்களை அளியுங்கள் என்று கேட்டுக் கொள்கிறோம். **– ஆசிரியர்**






# இலங்கை யாழ்ப்பாணத்தில் நடந்த இரண்டாவது உலகத் திருக்குறள் மாநாட்டில் பங்கேற்ற நம் இனத்தவர்

## முனைவர் துரை அங்குசாமி

### டாக்டர் V.கஸ்தூரி

இலங்கையில் உள்ள யாழ்ப்பாணம் மாநகரில் உள்ள யாழ்ப்பாணம் பல்கலைக்கழகத்தில் உள்ள முனைவர் கைலாசபதி அரங்கில் இரண்டாவது உலகத் திருக்குறள் மாநாடு 20, 21, 22 - 02-2020 ஆகிய 3 நாட்கள் நடைபெற்றது.

யாழ்ப்பாணம் பல்கலைக்கழகம், மதுரை காமராஜர் பல்கலைக்கழகம், தமிழ்நாடு அரசு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், இராமசந்தர் மிஷன் ஆகிய அமைப்புகள் இணைந்து இம்மாநாட்டை நடத்தின.

உலகில் பல்வேறு நாடுகளிலுள்ள பல பல்கலைக் கழகங்களின் பேராசிரியர்கள், தமிழறிஞர்கள், தமிழ் அமைப்புகளின் பிரதிநிதிகள் என ஏராளமானவர்கள் இதில் பங்கேற்றனர். இலங்கைத் தமிழர்கள் நிறையப் பேர் ஆர்வத்துடன் இம்மாநாட்டில் பங்கேற்று விழாவுக்கு சிறப்புச் சேர்த்தனர்.

யாழ்ப்பாணம் பல்கலைககழக தமிழிசைத் துறை மாணவ - மாணவியர் ‘நீராடுங் கடலுடுத்த’ என்ற இறைவணக்கப் பாடலை முற்றிலும் புதிய ராகத்தில் மெட்டமைத்து முற்றிலும் புதுமையாகப் பாடியது அனைவரது காதுகளிலும் தேனாகப் பாய்ந்தது.

யாழ்ப்பாணம் பல்கலைக்கழக நடனத்துறை மாணவியர் சுழன்று சுழன்று ஆடிய பரதநாட்டியம் மிகமிக அற்புதமாக அமைந்தது. தமிழர்களின் பண்பாட்டு வளத்தை, தமிழினம் உற்ற அல்லல்களை நாட்டிய நாடகமாக ஆடிய கலைவடிவம் மாநாட்டுக்குப் பெருமை சேர்த்தது.

இதைத்தொடர்ந்து தமிழறிஞர்கள் பலரும் பங்கேற்ற அரங்க நிகழ்வுகள் தொடர்ந்து நடைபெற்றன.

தமிழ்நாடு அரசு வழியனுப்பிவைத்த இரண்டு திருவள்ளுவர் சிலைகள் மாநாட்டின் முன்புறத்தில்



யாழ்ப்பாணம் பல்கலைக் கழக முன் வாயிலில் உள்ள ஈழப்போரில் உயிர்நீத்த தியாகிகளின் நினைவிடத்தில் குலமுரசு ஆசிரியர் துரைஅங்குசாமி, மதுரை காமராசர் பல்கலைக் கழக தமிழ்த் துறைத் தலைவர் முனைவர் சத்யமூர்த்தி, அம்மா தமிழ்ச் சங்கத் தலைவர் ஆவடிகுமார், ஆஸ்திரேலிய பல்கலைக்கழக பேராசிரியர் ஜெயராமசர்மா, யாழ்ப்பாணப் பல்கலைக்கழகப் பேராசிரியர் ரகுநாதன் ஆகியோர்

வருவோரை வரவேற்கும் விதத்தில் வைக்கப்பட்டிருந்தது.

இத்திருக்குறள் மாநாட்டில் பங்கேற்ற தமிழறிஞர்களின் வரிசையில் நம் இனத்தைச் சேர்ந்த இருவர் இடம்பெற்றது குறிப்பிடத்தக்கது.

- முனைவர் துரைஅங்குசாமி, குலமுரசு ஆசிரியர்
- டாக்டர் ப.கஸ்தூரி, ராம்சந்தர் தியான அமைப்பின் ஒருங்கிணைப்பாளர்.

மேடை நிகழ்வில் முனைவர் துரை அங்குசாமி 'திருக்குறள் ஒரு சமுதாய இலக்கியம்' என்ற தலைப்பில் ஆற்றிய உரை மிகுந்த வரவேற்பையும் கைதட்டலையும் பெற்றது. மாநாட்டு அமைப்பாளர் உடையார்கோயில் குணா அவர்களால் துரை அங்குசாமி அவர்கட்கு 'திருக்குறள் விருது' வழங்கி கௌரவிக்கப்பட்டது.

மாநாட்டுக் கருத்தரங்கம் 7 அமர்வுகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு அமர்வும் ஒரு மூத்த தமிழறிஞர் தலைமையில் ஆய்வுக் கட்டுரைகள் வாசிக்கப்பட்டு விவாதிக்கப்பட்டன.




2வது உலகத் திருக்குறள் மாநாட்டு மலரில் வெளிவந்த டாக்டர் துரைஅங்குசாமி அவர்களின் வாழ்த்துக் கவிதை

ஈரடியால் ஊருலகை அளந்து
ஈடற்ற அறம் பொருள் இன்பத்தை
மூப்பறியா முத்தமிழில் முப்பாலாய்
மானுடத்தை மேலுயர்த்த மொழிந்திட்ட
சீரிளமைத் திறம்மிக்க திருக்குறளை
சூரியக்கதிராய்ச் சுடர்விட வைக்கும்
சான்றோர்கள் பங்கேற்கும் மாநாடு !
சரித்திரச் சிறப்புடைய யாழ்நகரில் !
ஈராயிரத்து இருபது பிப்ரவரியில்
இனிதாக நடந்தேற வாழ்த்துகிறேன் !
பூரணப்பொலிவுடன் பொங்குமறிவுடன்
புகழினிக்க அரங்கேற வாழ்த்துகிறேன் !



ஒரு அமர்வுக்கு முனைவர் துரை.அங்குசாமி அவர்கள் தலைமை ஏற்றார். ஆராய்ச்சியாளர்கள் தம் ஆய்வுக் கட்டுரைகளை வாசித்து விவாதிக்கப் பட்டது. இந்த அமர்வில் செல்வி குணா பத்மபிரியா என்பவரும் ஆய்வுக் கட்டுரையை சமர்ப்பித்து, விவாதங்களுக்கு விடையளித்தார்.

செல்வி குணா பத்மபிரியாவை அறிமுகம் செய்துவைத்து துரைஅங்குசாமி அவர்கள் உரையாற்றினார். சித்த மருத்துவ மாணவியான குணா பத்மபிரியா தனது 6 வயதிலேயே 1330 குறள்களையும் மனப்பாடம் செய்து நூற்றுக்கும் மேற்பட்ட விருதுகளைப் பெற்றவர். 2015ல் நாடாளுமன்றத்தில் நடந்த திருக்குறள் விழாவில் ஜனாதிபதி பிரணாப் முகர்ஜியிடமும் பரிசு பெற்றுள்ளார் என்பதைக் குறிப்பிட்டு பாராட்டினார்.

டாக்டர் கஸ்தூரி அவர்கள் தமது கணவர் திரு. வெங்கடாசலம் அவர்களுடன் இம்மாநாட்டில் பங்கேற்றார். 'திருக்குறளும் இதய நிறைவு தியானமும்' என்ற தலைப்பில் அருமையான ஒரு உரை நிகழ்த்தினார். மாநாட்டு அரங்கில் இருந்த அனைவரையும் தியானம் செய்ய வைத்தார். 20 நிமிட நேரம் நிகழ்ந்த இந்த ஆழ்ந்த தியானம்



திருக்குறள் மாநாட்டை தெய்வீக அலைகள் தவழும் மாநாடாக மாற்றியது.

டாக்டர் கஸ்தூரி அவர்கள் எழுதிய இலங்கையில் இன்ப சுற்றுலா எனும் நூல் முனைவர் பேராசிரியர். அங்கப்பன் அவர்களால் வெளியிடப்பட்டது. யாழ்ப்பாணம் பேராசிரியர் கி.விசாகரூபன் நூலைப் பெற்றுக் கொண்டார்.

உலகின் பல்வேறு நாடுகளிலிருந்து வந்திருந்த தமிழறிஞர்களின் இம்மாநாட்டுச் சந்திப்பு திருக்குறளுக்கும் தமிழ்மொழிக்கும் தமிழ்த் திருநாட்டிற்கும் பெருமை சேர்த்த சரித்திர நிகழ்வாகும். வருகை புரிந்த அனைவரையும் விருந்தோம்பி, உபசரித்த இலங்கைத் தமிழர்களின் உயர் பண்பாடு இங்கு நினைவு கூறத்தக்கது. நம்மவர்கள் பங்கேற்ற குழுவை ராணுவ நட்சத்திர விடுதியில் தங்கவைத்து அன்பினிக்க உபசரித்த யாழ்ப்பாணம் பல்கலைக்கழக அழகியல்துறை விரிவுரையாளர் திருமதி. சூரியபிரதீபா அவர்களின் உயர்ந்த விருந்தோம்பல் பண்பு இங்கு குறிப்பிடத்தக்கது.

இத்தகைய உலகளாவிய ஒரு மாநாட்டில் நம்மவர்களான முனைவர். துரை அங்குசாமி அவர்களும், டாக்டர் கஸ்தூரி வெங்காசலம் அவர்களும் பங்கேற்றதும், பெருமைப்படுத்தப் பட்டதும் நமக்கெல்லாம் மகிழ்வைத் தருகிற செய்தி.

செய்தித் தொகுப்பு:
திருமதி. **வெண்ணிலா திருவேங்கடம்,** (8 வீடு)
தமிழார்வலர் மற்றும் மாநாட்டுப் பங்கேற்பாளர், சென்னை.

## சின்னச் சின்னத் தகவல்கள்

- உலக அளவில் இரும்பு மனிதர் என்று அழைக்கப்பட்டவர் - பிஸ்மார்க் (ஜெர்மனி)
- முதலில் மனித இனம் தோன்றிய இடம் ஆசியா
- முதலில் உலக வரைபடத்தை வரைந்தவர் தாலமி
- முதலில் சர்க்கஸ் தோன்றிய நாடு ரோமாபுரி
- முதலில் குடையைக் கண்டுபிடித்தவர்கள் சீனர்கள்
- முதலில் ரேடார் உருவாக்கியவர்கள் ஜெர்மானியர்
- முதலில் தோன்றிய இலக்கியம் இராமாயணம்
- நம் வீடுகளில் காணப்படும் ஈக்களின் ஆயுள்காலம் இரண்டே வாரங்கள்தான்.
- தேங்காய் அதிகம் விளைவது பிலிப்பைன்ஸ் நாட்டில்தான்.

## குலமுரசு வரவில்லையா?

**உங்கள் ID எண் அல்லது முகவரியுடன் கொடுத்துள்ள செல்பேசி எண்ணைக் குறிப்பிட்டு**
**9965 900 990 என்ற செல்பேசி எண்ணில் தொடர்பு கொண்டு தங்களது சந்தா விபரத்தை அறியலாம்.**

- குலமுரசு இதழ் ஒவ்வொரு மாதமும் 20ஆம் தேதி சென்னை பத்திரிகா சேனல் தபால் அலுவலகத்திலிருந்து பதிவு பெற்ற பத்திரிகைகளுக்கான சலுகை திட்டத்தில் Book Post மூலம் சந்தாதாரர்களுக்கு அனுப்பப்படுகிறது. இதழ் வெளியாகும் 20ஆம் தேதிக்குப் பிறகு ஒரு வார காலமாகியும் கிடைக்கப் பெறாதவர்கள் 27ஆம் தேதி முதல் தங்களது புகாரைப் பதிவு செய்யலாம்.
- புகார்கள் மீது அடுத்த 7 நாட்களுக்குப் பிறகு அல்லது அடுத்து வரும் மாதம் 5ஆம் தேதிக்குள் விசாரித்து, புத்தக இருப்பின் அடிப்படையில் உரியவர்களுக்குக் கிடைக்க நடவடிக்கை எடுக்கப்படும்.
- அப்படி மீண்டும் அனுப்பிவைக்கப்படும் புத்தகங்களும் கிடைக்கப் பெறாதவர்கள் தங்களுடைய தபால் முகவரி மற்றும் பின்கோட் எண்களை சரிபார்க்கவும் அல்லது உங்கள் பகுதி தபால் அலுவலரின் உதவியை நாடவும்.
- எல்லாம் சரியாக இருந்தும் 3 மாதங்கள் வரை புத்தகங்கள் கிடைக்கவில்லை என்று புகார் தெரிவிக்கும் சந்தாதாரர்களுக்கு விருப்பத்தின் அடிப்படையில் பதிவுத் தபாலில் குலமுரசு அனுப்பி வைக்கப்படும். இதற்கு ஆகும் கூடுதல் கட்டணத்தை சந்தாதாரர் செலுத்த வேண்டும்.



# சாயம்போன பட்டாம்பூச்சி



பண்ணைக் கவிஞர் ஜெயதேவன்
(16 வீடு)

ஒவ்வொரு கல்லாய் ஒவ்வொரு கல்லாய்
பானையில் போட்டு நீர்குடித்த காகம்
கதையிலிருந்து எழுந்து வந்து விட்டது.
என் தோட்ட நீர்வறண்ட குளத்திற்கு.

வண்டியோட வாழை என்பது எக்காலம்?
நண்டூற நெல் என்பது எவ்விதம்
வாழை சாய்ஞ்ச நிலத்தில்
நெல் காய்ஞ்ச புலத்தில்

வரப்புயர நீருயரவும்
நீருயர நெல்லுயரவும் வாய்ப்பில்லா பூமியில்
“குடி” மட்டும் உயர்கிறது
அதனால் கோன் மட்டும் உயர்கிறது.

மாம்பழத்துச் சாறெடுத்து வயலுக்கு உரமிட்டு
தேன்பாய நெல்விளைஞ்ச மண்ணில்
மடையெல்லாம் அமிலத் தண்ணி
ஊற்றெல்லாம் சாயத் தண்ணி

ஆயன்குழல் கேட்ட காதில் கேட்கிறது
நூலாலை சங்கு ஒலி
தினக்கூலி மாடுவந்து பட்டை அடையும் நேரமிது.

ஓடுமீன் ஓட உறுமீன் பார்த்திருந்த
கொக்குக்கு கொக்கு பேத்தி
காய்ஞ்ச மீனுக்கு காத்திருக்கும்
மணலாகிப் போன
புனலிருந்த ஆற்றில்

சிற்றில்கட்ட சிறுமிகள் இல்லை
சிறுமிகள் பிடிக்க நண்டுகள் இல்லை
காய்ஞ்சு கெடுத்த பூமியை
பேய்ஞ்சு கெடுக்கும் மழையை
காணாத பட்டாம்பூச்சி
தேசம்விட்டு சேதம் போகும்
இந்த தேசம் எங்கே போகும்?

**முகங்கள்**

குருவி முட்டைகளை உடைத்துச் சாப்பிட்டுவிட்டு
கூடுகளையும் சிதைத்த காலங்கள்
வீடு கட்டிய காலங்களைவிட சுகமானவை.

தீப்பெட்டிக்குள் பொன்வண்டுகளை
திணித்துக் கொண்டோடிய என் பால்யத்தை
பறக்கவிட்டுவிட்டு கைமேல் அமர்ந்திருக்கிறது
கணிப்பொறியின் எலிப்பொறி.

வாழைக்காய்சுட்டு தேனில் குழைத்துச் சாப்பிட்ட
சின்னவயது ஞாபகங்கள் ஜீரணித்துவிட்டு
விலகிப்போகிறான் டயோட்டா காரில்
என் பால்யநண்பன் பலராமன்

அவன் மகள் எறிந்த ஃபைவ் ஸ்டார் உறைபொறுக்கி
சேகரிக்கிறாள் பொறி உருண்டையுடன் என்மகள்.

ஓலைத்தடுக்குள்ளிலிருந்து வரும் செண்பகத்தின்
உடல்கரைத்த மஞ்சளை உறிஞ்சிக் குடித்த சின்ராசு
ஷவரில் ஜீவிக்கிறான்
‘தினார்’ களில் குளிக்கும் மென்பொருள்
மஞ்சுளாவின் கணவனாய்.

சுரைக்குடுவையில் நீச்சல் பழகித் தந்த
வடிவேல் வாத்தியார் யு.எஸ். போகிறார்
வருடமொருமுறை.

சென்செக்ஸ் புள்ளிகளின் ஏற்ற இறக்கங்களை
துல்லியமாய் சொல்கிறான்
கில்லி விளையாட்டில் எப்போதும தோற்கும் ஏகாம்பரம்.

இருட்டுக் கூடியதும் பேய்பயத்தில் பிதற்றும் உமா
டாலர் பொறுக்குகிறாள்
அமெரிக்க மென்பொருள் காட்டில்

கருவேல நிழலில் காத்திருப்பாள் அம்மாச்சி
உறுமும் விமான ஒலியில் பேத்தியின் முகம் பார்த்தபடி

மெட்டி ஒலியைத் தின்று விட்டு
விண்டோஸில் அமர்ந்திருக்கிறாள் என் மகள்
ஜன்னலோரம் கண்களை நட்டு வைத்து
கனவுப்பூ பறித்தபடி நான்.

கட்டுச்சாதம் உண்ட எங்களூர் ‘மூலையாறு’
என் மூச்சில் நுரை கொப்பளித்தபடி.





# அந்தியூர் ஸ்ரீ வரதராஜ பெருமாள் கோயில் கும்பாபிஷேகப் பெருவிழா

உடுமலை பொள்ளாச்சி ரோட்டில் அமைந்துள்ள அந்தியூரில் 24 மனை தெலுங்கு செட்டியார் சமூகம் மும்முடியார் குலதெய்வம் அருள்மிகு பெருந்தேவி தாயார் சமேத ஸ்ரீ கன்னியம்மன் திருக்கோவிலின் கும்பாபிஷேக விழா 5-02-2020 புதன்கிழமை காலை 9:15 மணிக்கு மேல் 10:15 மணிக்குள் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

கோயிலில் நூதன ஸ்ரீ சக்கரத்தாழ்வார், ஆஞ்சநேயர் சந்நதிகள் அமைக்கப்பட்டுள்ளது. அம்மன் சந்நதி முன்புறம் அழகிய புதிய மண்டபம் கட்டப்பட்டு அனைத்து விமானங்களும் அழகான வர்ணம் தீட்டப்பட்டுள்ளது.

3-02-2020 அன்று காலை 9 மணிக்கு மஹா சுதர்சன ஹோமம், மகாலட்சுமி ஹோமம் நடைபெற்றது. காலை 11 மணிக்கு திருமூர்த்தி மலையிலிருந்து தீர்த்தம் எடுத்து வந்தனர். அன்று மாலை 5 மணியளவில் வாஸ்து சாந்தி முதற்கால ஹோமம் நடைபெற்றது.

4-02-2020 அன்று காலை 2ஆம் கால ஹோமங்கள் நடைபெற்றது. 11 மணியளவில் முளைப்பாரி அனைத்து பெண்களும் எடுத்து வந்தனர். மாலை 5 மணிக்கு அனைத்து விமானங்களுக்கும் விக்ரகங்களுக்கும் திருமஞ்சனம் சார்த்தப்பட்டது. 7 மணிக்கு மேல் மூன்றாம் கால யாக பூஜைகள் நடைபெற்றன. இரவு 9 மணிக்கு அஷ்டபந்தன மருந்து சாற்றுதல் நடைபெற்றது.

5-02-2020 புதன்கிழமை காலை 5 மணிக்கு கோபூஜை, விஸ்வரூப தரிசனம், நான்காம் கால ஹோமம் நடைபெற்றது. காலை 9 மணிக்கு கலசங்கள் புறப்பட்டு விமானங்களுக்கு கும்பாபிஷேகம் நடைபெற்றது. மதியம் 3 மணிக்கு திருக்கல்யாணம் நடை பெற்றது. மாலை 6 மணிக்கு வாணவேடிக்கை, மேளதாளங்கள் முழங்க திருவீதி உலா நடைபெற்றது.

இம்மாபெரும் கும்பாபிஷேக விழாவை திவ்யதேசம், மேலக்கோட்டை ஸ்ரீ வரவரமுனி மடம் பிரதம பீடாதிபதி ஸ்ரீஸ்ரீஸ்ரீ சடகோப ராமானுஜ ஜீயர் சுவாமிகள் மங்களா சாசனம் செய்து விக்க, ஸ்ரீ ரங்கம் திருக்கோயில் தலைமை அர்ச்சகர் ஸ்ரீ சுந்தர் பட்டர் அவர்களால் சிறப்பாக நடத்தி வைக்கப்பட்டது.

4-02-2020 செவ்வாய் இரவு 7 மணிக்கு கும்பகோணம் ஸ்ரீ ஸ்ரீ விட்டல்தாஸ் மஹராஜ் அவர்களின் 'நாம சங்கீர்த்தன' நிகழ்ச்சி பெரும்திரளான மக்களின் ஆரவாரத்துடன் ஆடல் பாடல்களுடன் சிறப்பாக நடைபெற்றது.








அனைத்து ஏற்பாடுகளையும் அந்தியூர் மும்முடியார் குலப் பெரு மக்களும், பூஜை நிர்வாகம் மற்றும் கும்பாபிஷேக தலைவர் A.N.சண்முகம் செட்டியார் தலைமையில் ஊர் பொதுமக்கள் ஒத்துழைப்புடன் மிகச் சிறப்பாக நடத்தி அனைவரின் நன்மதிப்பைப் பெற்றனர்.

அனைத்து நாட்களிலும் அன்னதானம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. கும்பாபிஷேக நாளில் அந்தியூரின் தென்புறம் அமைந்து உள்ள 6 ஏக்கர் பரப்பளவில் கலை அரங்க மண்டபமும், 15000 சதுர அடியில் மிகப் பிரம்மாண்டமான அன்னதான கூடமும் அமைக்கப்பட்டு 16 ஆயிரம் பேர் அன்னதானத்தில் காலை முதல் இரவு வரை பெருமாளின் அன்னத்தை சுவைத்து அறுசுவை உணவுடன் அருந்தி மகிழ்ந்தனர்.

விழாவில் கால்நடைத்துறை அமைச்சர் மாண்புமிகு. உடுமலை கே.ராதாகிருஷ்ணன் அவர்களும், தமிழ்நாடு சட்டப்பேரவை துணைத் தலைவர் மாண்புமிகு பொள்ளாச்சி வ.ஜெயராமன் அவர்களும், மடத்துக்குளம் சட்டமன்ற உறுப்பினர் இரா. ஜெயராமன் அவர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

மேலும், ஊராட்சி மன்றத் தலைவர்களும், உடுமலை கோட்டாட்சியர், வட்டாட்சியர், மாவட்ட காவல்துறை கண்காணிப்பாளர், ஆய்வாளர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

செய்தித் தொகுப்பு: **M.சௌந்தரக்குமார்,**
உடுமலைப்பேட்டை.





# ஈரோடு கொங்கலம்மன் தேர்த்திருவிழா

ஈரோடு நகரில் மிகவும் பிரசித்தி பெற்ற பழமை வாய்ந்த அருள்மிகு கொங்கலம்மன் திருக்கோவிலில் வருடம்தோறும் தை மாதத் திருவிழா மிகச் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

இக்கோவில் உருவான காலத்தில் இருந்தே நமது 24 மனை தெலுங்கு செட்டியார்கள் சமூகத்திற்கு பண்டிகையின் போது ஒரு நாள் ஒதுக்கி உரிய மரியாதை வழங்கப்பட்டு வருகிறது.

அதன்படி இந்தாண்டும் நமது சமூகத்திற்காக தை மாதம் 24 ஆம் நாள் 07.02.2020 வெள்ளிக் கிழமை அன்று ஒரு நாள் ஒதுக்கப்பட்டது. அதன்படி அன்று காலை 6 மணிக்கு அபிஷேக ஆராதனையுடன் விழா தொடங்கியது. மதியம் 11 மணிக்கு உச்சி கால பூஜையும், மாலை 4 மணிக்கு அபிஷேக ஆராதனை சந்தனக்காப்பு அலங்காரமும் நடைபெற்றன. மாலை 6 மணிக்கு நமது சமூக பெண்கள் கலந்து கொண்ட மிக பிரமாண்டமான விளக்கு பூஜை நடந்தது. அதனைத் தொடர்ந்து இரவு 7 மணிக்கு அன்னதானம் நடைபெற்றது. இரவு 7.30 மணிக்கு உற்சவர் சிம்ம வாகனத்தில் எழுந்தருளி திருத்தேரை நமது சமூக மக்கள் புடைசூழ வடம் பிடித்து இழுத்து வந்தனர்.

இந்நிகழ்ச்சியில் ஈரோடு 24 மனை தெலுங்கு செட்டியார்களின் நமது இன மக்கள் ஆயிரத்திற்கும் மேற்பட்டோர் கலந்து கொண்டனர். நிகழ்ச்சி ஏற்பாடுகளை ஈரோடு 24 மனை தெலுங்கு செட்டியார்களின் சமூக சங்கத்தினர் சிறப்பாக செய்திருந்தனர்.

செய்தித் தொகுப்பு: **அ.சுரேஷ்,**
குலமுரசு நிருபர், பள்ளிபாளையம்




**புதிய சந்தா, புதுப்பித்தல், முகவரி மாற்றம் மற்றும் மணக்கோலம் பகுதியில் சேர்க்க மற்றும் திருத்தம் செய்ய தொடர்பு கொள்ளவேண்டிய செல்பேசி எண்: 99 65 900 990**

## 16 வீடு ஆண்

**GR16- ID 10369 - 03/20(WA)**

பெயர் : V. கோகுலகண்ணன் படிப்பு: BE.,
பணி: Asst. Manager, State Bank of India
வருமானம்: 60,000/Monthly குலம்: மாதளையவர்
நட்சத்திரம்: சதயம் பிறந்த நாள்: .09.1993
தொடர்புக்கு: G.வேல்முருகன், போடிநாயக்கனூர்.
செல்: 94876 60485, 70927 16986

**GR16- ID 8139 - 03/20(WA)**

பெயர் : Dr. C.G.S. விக்னேஷ் படிப்பு: M.B.B.S.,
பணி: Emergency Medicine பிறந்த நாள்: .08.1993
குலம்: கணித்தியவர் நட்சத்திரம்: பூசம்
தொடர்புக்கு: Dr.சதானந்தன், கோவை.
செல்: 94436 50867, 73396 30457

**GR16- ID 10355 - 03/20 (OFF)**

பெயர்: R.கௌதம் படிப்பு: BE.,
பணி: Cater Piller, Thiruvallur வருமானம்: 85,000/மாதம்
பிறந்த தேதி: .12.1993 நட்சத்திரம்: பூரட்டாதி
தொடர்புக்கு: S.ராமகிருஷ்ணன், சென்னை.
செல்: 94446 55656

**R16- ID 10366 - 03/20(POST)**

பெயர் : S. சரவணகுமார் படிப்பு: DME
பணி: Company (Permanant Job) வருமானம்: 30,000/Monthly
குலம்: மும்முடியர் நட்சத்திரம்: அவிட்டம்
பிறந்த நாள்: .02.1992 தொடர்புக்கு: R.சிங்காரவேலு, திருவாரூர். செல்: 99447 95286, 88258 70053

**GR16- ID 10344 - 03/20(OFF/PH)**

பெயர் : த.வினோத் ராஜா படிப்பு: B.Sc., (Animation&VFX)
பணி: Software, Chennai. வருமானம்: 25,000/-
நட்சத்திரம்: ரோகிணி பிறந்த நாள்: .03.1991
குலம்: பலிவிதியர் தொடர்புக்கு: க.தண்டபாணி, வடலூர். செல்: 77083 22318, 77087 13703

## மணக்கோலம் வாசகர்கள் கவனத்திற்கு

* மணக்கோலம் பகுதி வெளிப்படையானது. நம் இனமக்கள் வரன் தகவல்களைப் பகிர்ந்து கொள்ள உதவும் இலவச சேவைப் பகுதி. இது விளம்பரம் அல்ல. இதற்கு தனியாகக் கட்டணம் கிடையாது.
* மணக்கோலம் பகுதியில் வரன் விபரம் வெளியிட 24 மனை குலமுரசு இதழுக்கு ஆண்டு சந்தாதாரராக இருக்கவேண்டும் என்பது மட்டுமே விதிமுறை.
* இப்பகுதியில் வரன் பற்றிய தகவல்கள் மூன்று மாத இதழ்களில் தொடர்ந்து வெளியிடப்படும். மூன்று மாதங்களில் வரன் அமையாதவர்கள் மீண்டும் மூன்று மாதங்கள் மறுபிரசுரம் செய்து கொள்ளலாம். இம்முறையில் ஆண்டு சந்தா நிறைவடையும் காலம் வரை ஒருவர் நான்கு முறை மறுபிரசுரம் செய்து கொள்ளலாம்.
* மணக்கோலம் பகுதியில் மறுபிரசும் செய்ய, விபரம் சேர்க்க, சந்தா விபரம் அறிய **99 65 900 990** என்ற செல்பேசி எண்ணிற்கு தொடர்பு கொள்ளவும் அல்லது manakolam24@gmail.com என்ற மின்னஞ்சலில் தெரிவிக்கவும்.
* வரன்களுக்குத் திருமணம் உறுதிசெய்யப்பட்டால் சேவை மைய எண்ணில் தொடர்பு கொண்டு வரன் தகவலை நீக்கிக் கொள்ளலாம்.
* மணக்கோலம் மூலமாக வரன் அமைந்தவர்கள் திருமணப் படத்தை குலமுரசில் வெளியிட விபரங்களுடன் அனுப்பிவைத்தால், வெளியிடப்படும்
* ஒவ்வொரு மாதமும் 5ம் தேதிக்கு முன்பு வரும் வரன் தகவல்கள் மட்டுமே அம்மாத இதழில் இடம்பெறும். அதற்குப்பின் வருபவை அதற்கடுத்த இதழில் இடம்பெறும்.
* இப்பகுதியில் வெளியாகும் வரன் விபரங்களுக்கு வெளியிடும் குடும்பத்தாரே முழுப் பொறுப்பு. மணமகன் அல்லது மணமகள் குறித்த விபரங்களை சம்பந்தப்பட்ட குடும்பத்தாரே தொடர்பு கொண்டு விசாரித்து தங்களுடைய சொந்தப் பொறுப்பில் திருமணங்களை உறுதி செய்துகொள்ளவும்.
* வணிக நோக்கமுடையவர்கள் – இடைத்தரகர்கள் எந்த நிலையிலும் மணக்கோலம் பகுதியைப் பயன்படுத்தி பணம் வசூலிப்பதோ – நகல் எடுத்து விற்பனை செய்வதோ – வேறு வழிகளில் பயன்படுத்துவதோ கூடாது.
* 24 மனை குலமுரசு இதழுக்கு தபால், மின்னஞ்சல் மற்றும் வாட்ஸ்அப் மூலமாக வரும் வரன் விபரங்களை நாங்கள் எவருடனும் பகிர்ந்து கொள்வதில்லை. வேறு தளங்களிலும் நாங்கள் வெளியிடுவதில்லை.




24 மனை தெலுங்கு செட்டியார்கள்
தெலுங்குபட்டி செட்டி, சாது செட்டி
சமுதாய பெருமக்கள் அனைவரும்,
எல்லா வளமும், நலமும் பெற்று
நிறை செல்வங்களுடன்,
நீண்ட ஆயுளுடனும் வாழ்வாங்கு வாழ
உலகளந்த மகாவிஷ்ணு,
அன்னை காமாட்சி தாயை
வேண்டி வணங்குகிறேன்.

என்றும் உங்கள் பாசத்துடன்:

தலைமை
சங்கத் தலைவர் **ரெ. நடராஜன்**

**24 மனை தெலுங்கு செட்டியார்கள் தலைமைச் சங்கம்**
155, ஈ.வே.ரா.பெரியார் நெடுஞ்சாலை,
கீழ்பாக்கம், சென்னை - 600 010.

# மணமகள் தேவை



| | |
|---|---|
| பெயர் | : **T. வெங்கடேஷ்** |
| படிப்பு | : B.Sc., |
| பிறந்த நாள் | : 26–09–1978 செவ்வாய்கிழமை 04:36 AM பிறந்த இடம்: பொள்ளாச்சி |
| நட்சத்திரம் | : புனர்பூசம் 3ஆம் பாதம் |
| ராசி / லக்னம் | : மிதுனம் ராசி / சிம்மம் லக்னம் |
| குலம் | : 8 வீடு – மாரட்டியர் குலம் |
| குலதெய்வம் | : ராசாபட்டி ஸ்ரீ காமாட்சி அம்மன் |
| தொழில் | : சொந்தத் தொழில் – வியாபாரம் |
| வருமானம் | : ரூ. 1,00,000 / மாதம் |
| தந்தை பெயர் | : **V. தங்கவேல் செட்டியார்** |
| தாயார் பெயர் | : **T. தனலட்சுமி** |
| உடன்பிறந்தவர்கள் | : 2 பேர். ஆண் – 1, பெண் – 1 (திருமணமாகிவிட்டது) |
| வசிப்பிடம் | : பொள்ளாச்சி |
| தொடர்பு முகவரி | : 15, M.V.காம்ப்ளக்ஸ், ஸ்ரீ வாரி பாபா நகர், ரெட்டம்பேடு ரோடு, கும்மிடிப்பூண்டி, சென்னை – 601 201. |
| தொடர்புக்கு | : **97877 98987** |
| குறிப்பு | : விவாகரத்து ஆனவர்களும் தொடர்புகொள்ளலாம். |

| | | | |
|---|---|---|---|
| கேது | மாந் | | சந் |
| | இராசி | | குரு |
| | | | 1-லக் சனி |
| | | சுக் செவ் | சூரி புத ராகு |

| | | | |
|---|---|---|---|
| சூரி | சுக் | | சந் |
| புத | நவாம்சம் | | கேது |
| செவ் ராகு | | | 1-லக் சனி |
| | | குரு மாந் | |

குரு திசை இருப்பு: 6 வருடம் 3 மாதம் 28 நாள்



# P.M.P. கலை & அறிவியல் கல்லூரி




(இருபாலர் பயிலகம் - பெரியார் பல்கலைக்கழக இணைவு பெற்றது)

தோக்கம்பட்டி, தருமபுரி–5.

Ph : 04342 - 292681, 231682 Cell : 94432 59019




குறைந்த கட்டணம்

## U.G COURSES

B.Sc., Computer Science / Mathematics, Maths., (C.A) / Physics / Chemistry,

B.C.A., B.Com.,(C.A), B.B.A.,

B.Com., B.A., Tamil / English

நிறைந்த கல்வி

## P.G COURSES

M.Sc., Mathematics, Physics / Chemistry, M.Com.,

இலவச பேருந்து வசதி

## கல்லூரியின் சிறப்பம்சங்கள் :

- கடந்த 15 ஆண்டுகளாக கல்விப் பணியில் திறமையான மாணவர்களை உருவாக்கி மக்கள் மத்தியில் பெயர் பெற்ற அனுபவம் வாய்ந்த முதல் கலை அறிவியல் கல்லூரி.
- மாணவ, மாணவிகளின் ஒழுக்கம் மற்றும் பாதுகாப்பில் தனிக்கவனம்.
- உலகத்தரம் வாய்ந்த அடிப்படைக் கட்டமைப்பு வசதிகள் மற்றும் A/C வசதியுடன் கூடிய இயற்பியல், வேதியியல் மற்றும் கணினி ஆய்வகங்கள்.
- கல்லூரி பருவ கட்டணத்தை நான்கு தவணையாக செலுத்தும் வசதி.
- அனுபவம் வாய்ந்த முதல்வரின் சீரிய வழிகாட்டுதலில் தகுதியும் அனுபவம் வாய்ந்த பேராசிரியர்கள்.
- ஆண்டுதோறும் 80% மாணவர்கள் தேர்ச்சி பெற்று பட்டம் பெறுகின்றனர்.
- மத்திய, மாநில அரசுகள் வழங்கும் அனைத்து கல்வி உதவித்தொகையும் பெற்றுத் தரப்படுகிறது.
- IAS / IPS / TNPSC போட்டி தேர்வுகளுக்கு தனி பயிற்சி வகுப்புகள் மற்றும் மாதிரி தேர்வுகள்.
- SPOKEN ENGLISH, Personality Development மற்றும் Communication Skills போன்றவற்றிற்கு சிறப்பு வகுப்புகள்.
- Campus Interview– ல் முன்னனி நிறுவனங்களில் வேலைவாய்ப்பு பெற்றுத் தரப்படுகிறது. மேலும் சிறந்த மாணவர்களுக்கு பி.எம்.பி குரூப் நிறுவனங்களில் உடனடி வேலை வாய்ப்பு தரப்படுகிறது.
- அனைத்து வழித்தடங்களிலும் பாதுகாப்பான இலவசபேருந்து வசதி உண்டு.






# KANTHASAMY METAL ROLLING MILLS

**Manufacturers of : ALUMINIUM SHEETS, CIRCLES & VESSELS**

5/432-A, Kuppiyode, Maruharoad, PALAKKAD - 678 007.
E-mail: kanthaswamypalakkad@gmail.com
Phone: 0491-2572886, Mobile: 98430 54999

# RADHA METAL INDUSTRIES

**Manufacturers & Dealers in ALUMINIUM VESSELS & CIRCLES**

11/1434, Market Road, PALAKKAD - 14. Kerala.
E-mail: radhametalpalakkad@gmail.com
Phone: 2500610, 2502578, Mobile: 9447100891

**K.ராஜமன்னார் - R.மகாலட்சுமி மற்றும் குடும்பத்தார்,**

83, சர் சண்முகம் ரோடு, கோயம்புத்தூர் - 641002.



# உயிர்களிடத்தில் அன்பு வேண்டும்

உலகப் புகழ் பெற்ற சிலர் நம்மிலிருந்து எப்படி வேறுபட்டவர்கள்? நம்மைப் போலவே கண், மூக்கு, காது, எலும்பு, நரம்பு எல்லாம் இருக்கிறது. ஆனால் அவர்கள் பெயரின் அகல நீளம் பிரம்மாண்டமாய்... மிக மிகப் பிரம்மாண்டமாய் இருக்கிறது. அவர்கள் வாழ்நாள் எண்பது, எழுபது வயதோடு நின்று விடாமல் நூற்றாண்டு விழா கண்டு, பிறகு பல நூறு ஆண்டுகளாய் நீண்டு கொண்டே போகிறது. உதாரணம் யேசுபிரான்.

"தின்ன வரும் புலி தன்னையும் அன்புடன் சிந்தனை செய்திடுவாய். அன்னை பராசக்தி அவ்வுரு ஆயினள் அவளைக் கும்பிடுவாய்" என்று பாடியதோடு நில்லாமல் திருவனந்தபுரத்தில் சிங்கத்தைத் தடவிக் கொடுத்து திருவல்லிக்கேணியில் யானையைத் தொட்டுக் கொடுத்து அன்புள்ளவன் சாவதில்லை என்று அமரத்தனத்தை அறிவித்து பாரதி வாழ்ந்தானே மறக்க முடியுமா? "உயிர்களிடத்தில் அன்பு வேண்டும்" என்பது எத்தனை பெரிய மகா வாக்கியம்.

அவரைவிடக் கிழவர் புத்தர். அந்தக் கிழட்டு புத்தரை எவனும் மறக்க முடியவில்லை. உடலை உதறி ஐநூறு ஆண்டுகளுக்குப் பிறகும் தேடிப்பிடித்து அவரது படத்தை வரைய முயற்சி நடந்தது. தெருவுக்குத் தெரு தன் படத்தை பெரிசு பெரிசாக ஒட்டிக் கெடுக்கும் அரசியல் வியாபாரிகள் முகங்கள் அவர்கள் காலத்திலேயே புறக்கணிக்கப் பட்ட உலகில், செத்து (மன்னிக்கவும்) ஐநூறு ஆண்டுகளுக்குப் பின் அவர் அழகு முகத்தை வரைந்து பார்க்க உலகம் போட்டி போட்டது. என்ன காரணம்? ஏன் அப்படி?

எல்லை கட்டிக் கொள்ளாத தூய நல்லன்பு அந்த மனிதரிடம் இருந்ததால் உலகம் அவரைக் காதலித்தது. நிபந்தனையற்ற, கலப்படமற்ற, எதிர்பார்ப்பற்ற, பிறர் நலமே கருதும் பிழையற்ற அந்த அன்பு அதுவும் உயிர்க்குலம் முழுமைக்குமான அந்த அன்பு அவரை மறக்க முடியாதபடி செய்து விட்டது. உலகத்தின் ரசாயன மாறுதல்கள் அந்த வானத்தைத் தீண்டவே முடியவில்லை.



**சொல்வேந்தர் சுகிசிவம்**

மந்திர ஒலி... வேத கோஷம்... கொழுந்துவிட்டு எரியும் யாக அக்னி... யாருக்கும் எட்டாத மோட்சத்தை பிந்துசாரனக்குப் பெற்றுத்தர பிரம்மாண்டமான ஏற்பாடு நடந்து கொண்டிருந்தது. யாருக்கும் எந்தக் கெடுதலும் நினைக்காத. இலை தழைகளை மேய்ந்து மடி கனத்துப் பால் பொழியும் ஆடுகள், வரிசை வரிசையாக நிறுத்தப்பட்டிருந்தன. இன்னும் சில நொடிகளில் ஏதும் அறியாத ஆடுகள் பலியிடப்படும் கோரம் நடக்கப் போகிறது.

கை கால் முளைத்த சாந்த மூர்த்தியான புத்தர், கருணை பொழியும் விழிக் கமலத்துடன் யாக சாலையில் நுழைந்தார்.

"இந்த ஆடுகள் என்ன பிழை செய்தன. ஏன் இவற்றைப் பலியிடுகிறீர்கள்?" என்று ஞான சூரியன் வினா எழுப்பியது.

மறுத்துப் பேச முடியாத ஆளுமை மிக்க அந்த மகாத்மாவைப் பார்த்ததும் பிந்துசாரனுக்கு வியர்த்தது. "பகவானே இவற்றைப் பலியிடுவதைத் தடுக்க வேண்டாம். இந்த உத்தமமான வேள்வியில் பலியிட்டால் இந்த ஆடுகள் அடைய முடியாத சொர்க்கத்தை அடையும் பகவானே!" என்றான்.

"சொர்க்கம் போகும் என்றால் நல்லது. உடனே உன் மகனையும் மனைவியையும் பலியிடு. மேலான சொர்க்கம் அவர்கட்குக் கிடைக்குமே" என்று கருணை கலகலத்துச் சிரித்தது. பிந்துசாரனுக்கு மின்னல் வெட்டியது.

யாகம் நடத்தி வைப்பவர்களுக்கோ, நல்ல வேளை தங்களை வெட்டி சொர்க்கம் அனுப்பும் யோசனை சொல்லப்பட வில்லையே என்று உள்ளூர மகிழ்ச்சி. ஆடுதானே என்று

அலட்சியப்படுத்தாத அன்பு வெள்ளம் தான் புத்தரை அழிவற்றவராக்கியது.

வள்ளலாரைப் பற்றி ஒரு செய்தி சொல்லுவார்கள். அவரைப் பார்க்க வந்த அன்பர் ஒருவர் வழியில் நல்ல பாம்பைப் பார்த்து பயந்திருக்கிறார். உடனே வள்ளலாரை நினைத்து ஒரு மந்திரத்தைப் பிரயோகித்து பாம்பை அசையவொட்டாதபடி (கட்டுதல்) செய்துவிட்டு வள்ளலாரிடம் ஓடோடி வந்து சேர்ந்தார்.

அவர் ஏதோ சொல்லத் தொடங்கியதும், “அதெல்லாம் அப்புறம்... மந்திரத்தால் கட்டிய பாம்பை முதலில் கட்டவிழ்த்து விடு, பாவம்... அது உணவுக்காக வெளியில் வந்தது. உணவின்றி சிரமப்படும் வேறு யாராவது பார்த்தால் கொன்று விடுவார்கள். உனக்கு உன் உயிர் மட்டும் முக்கியம். அதற்கு அதன் உயிர் முக்கியம்” என்றார் வள்ளல் பெருமான் - என்றொரு செய்தி உண்டு. இது உண்மையா பொய்யா என்று கவலைப்பட வேண்டாம். ஜீவ காருண்யம் மோட்ச வீட்டின் திறவுகோல் என்று முழங்கிய வள்ளலார் இதயம் இப்படித்தான் இயங்கி இருக்கும்.



ஒருமுறை எறும்புப் புற்றை மிதித்துவிட்டு ரமணர் எறும்புகள் தன்னைக் கடித்துக் குதறும் வரை புற்றிலிருந்து காலை எடுக்கவில்லையாம். அது தமக்குத்தாமே கொடுத்துக் கொண்ட தண்டனை என்பார்கள். இதை விவர மாக எமது ‘சொன்னார்கள் சொன்னார்கள்’ புத்தகத்தின் இரண்டாம் பாகத்தில் பார்க்கலாம்.

எறும்பு என்றதும் இன்னொரு செய்தி. திருப்பதியில் வாழ்ந்த அனந்தாழ்வான் என்கிற பரம பாகவதர் அன்பர் கூட்டத்துடன் மலையில் இருந்து இறங்கி ஸ்ரீ ரங்கம் செல்ல வந்து கொண்டிருந்தார். மலை இறங்கியதும் மரத்தடியில் அமர்ந்து மேலே இருந்து சுமந்து வந்த புளியோதரை அன்னத்தைப் பிரித்தால் அத்தனையும் எறும்பு...

எறும்பு... எறும்பு... என்று பதறியபடி பொட்டலத்தை அப்படியே கட்டி மீண்டும் திருப்பதி மலையேறத் தொடங்கினார். ஏன்? திருமலையில் மீனாய், விலங்காய் ஏதாகினும் ஒன்றாய்ப் பிறப்பது பெரும் புண்ணியம். திருமலையில் ஏதேனும் ஆவேனே என்பது ஆழ்வார் வாக்கு. அப்படிப் புண்ணிய பலத்தால் திருமலையில் பிறந்த எறும்பைக் கீழே கொண்டு வந்துவிட்டுப் பாவம் தேடக்கூடாது என்று பசி பாராது மலையேறினாராம். உயிர்களிடத்தில் அன்பு வேண்டும் என்பதற்கு என்ன அழகான உதாரணம் பாருங்கள்.

முத்தாய்ப்பாக ஒரு செய்தி சொல்லட்டுமா? அண்ணல் நபிகள் ஒருமுறை தரையில் அமர்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருந்தார்களாம். அவரது நீண்ட மேல் துணி தரையில் தழையத் தழைய கிடந்திருக்கிறது.

அப்போது தொழுகைக்கான நேரம் வந்துவிட்டது. அழைப்பு கேட்டதும் தரையில் இருந்து எழப்போன நபிகள் நாயகம் பூனைக்குட்டி ஒன்று தமது மேலாடை மீது வெகு சொகுசாகத் தூங்குவதைக் கண்டார். அதன் உறக்கம் கலையுமே என்று கவலையுற்று ஒரு கணம் சிந்தித்தவர் யாரும் நினைத்துக் கூடப் பார்க்க முடியாத ஒரு காரியத்தைச் செய்தார்.

தமது சகோதரியை அழைத்து ஒரு கத்தரிக்கோல் கொண்டு வரச்சொல்லி துணியைத் துண்டித்துக் கொண்டார். பூனை சுகமாகத் தூங்கிக் கொண்டிருந்தது.

கத்தரிக்கப்பட்ட மேலாடையுடன் தொழுகைக்குப் புறப்பட்டார். இப்போது புரிகிறதா? உலகம் எத்தகையோரைத் தொழுகிறதென்று!

உயிர்களிடத்தில் அன்பு வேண்டும்.

இதைப் புரிந்து கொண்டால் இந்த நாள் ஓர் இனிய நாள்.

# வருந்துகிறோம்



நாட்டுக்கல்பாளையம் கண்டிக்குரகையர் குலம்
மச்சுக்கோயில் அருள்மிகு அங்காளபரமேஸ்வரி
அம்மன் திருக்கோயில் முன்னாள்
துணைத் தலைவர் ஒடையகுளம்

திரு.**O.A.திருமுருகானந்தம் செட்டியார்**
அவர்கள் 30-01-2020 அன்று
இறைவனடி சேர்ந்தார்.



பள்ளிபாளையம் 24 மனை தெலுங்கு
செட்டியார்கள் சமூகத்தின் வளர்ச்சிக்கு
முன்னோடியாகத் திகழ்ந்த காலஞ்சென்ற
சேலம் குகை கருங்கல்பட்டி 'செல்லி'
**ரா.சு.துரைசாமி செட்டியாரின்** மூத்த மகன்
திரு. **ரா.சு.துரை.வெங்கட்ராமன்** அவர்கள்
31-01-2020 அன்று இறைவனடி சேர்ந்தார்.



சுண்டக்காமுத்தூர் 24 மனை தெலுங்கு செட்டியார்
கல்விக் குழு உறுப்பினரும்,
சமூக முன்னோடியுமான
திரு. **N.பொன்னுசாமி செட்டியார்** அவர்கள்
13-02-2020 அன்று இறைவனடி சேர்ந்தார்.



மதுரை மாவட்டம் ஆத்தங்கரைபட்டி
ஸ்ரீமத் எந்தலு ஆவுலு அம்மாள்
சித்தையா சுவாமி கோவிலின் காரியதரியாக
நீண்ட காலம் பணியாற்றிய
போடி **K.A.சுப்பையன் செட்டியார்**
அவர்களின் மனைவி
திருமதி **S. நாகம்மாள்** அவர்கள்
19-02-2020 அன்று இறைவனடி சேர்ந்தார்.

*இவர்களது மறைவுக்கு குலமுரசு தனது ஆழ்ந்த இரங்கலையும், அஞ்சலியையும் தெரிவித்துக் கொள்கிறது.*



# வால்நட் பருப்பு

சிக்கிம், நேபாளம், இமாலயப்பகுதிகளில் வளரும் அக்ரூட் வகை மரங்களில் இருந்து கிடைக்கும் கொட்டைகளே வால்நட் எனப்படுகிறது.

இதிலுள்ள ஆல்பா லியோலெனிக் அமிலம், உயிரணுக்களை பெருக்குகிறது. மேலும் ஆழ்ந்த உறக்கத்தை கொடுக்கும் தன்மை கொண்டவை. மூளையை அமைதிப்படுத்துவதோடு, டிமென்ஷியா என்ற ஞாபக சக்தி குறைவு நோயையும் வரவிடாமல் தடுக்கிறது.

இதயத்துக்கு ஆரோக்கியம் அளிக்கும் ஒமேகா 3 அமிலம் அதிகம் உள்ளன. இதனால், கெட்ட கொழுப்பை உடலில் குறைத்து நல்ல கொழுப்பை அளிக்கிறது. மேலும் இதை பாலில் கொடுக்க வைத்து அருந்தினால், கண் சம்பந்தப் பட்ட வியாதிகள் வராமல் தடுக்கப்படுகிறது என்றும், பாரம்பரிய வைத்திய முறைகள் தெரிவிக்கின்றன.

மூளையின் அமைப்பைக் கொண்டுள்ள இந்த பருப்பு, மூளைக்கு பலம் சேர்த்து, மூளைச்சோர்வை நீக்கி நினைவாற்றலை அதிகரிக்கும்.

இதில், நிறைவுறா கொழுப்பு அமிலம், வைட்டமின் ஈ ஆண்டி ஆக்ஸிடென்ட் ஆகியவை உள்ளன. உடலுக்கு தேவையான மிக முக்கியமான மினரல் அனைத்தும், இதிலுள்ளன. மன அழுத்தம் உள்ளவர்கள், வால்நட்டை சாப்பிட்டால் மன அழுத்தம், உடல் சோர்வு நீங்கும்.

ரத்தத்தை சுத்தப்படுத்தி, மூளைக்கு கடத்தும் ஆற்றல் வால்நட்டில் உள்ளது. இதிலுள்ள ஆன்டிஆக்ஸிடென்ட், இருதய நோய்கள் வராமல் தடுக்கும். தினமும் சாப்பிட்டால் இதயம், கொழுப்பு சம்பந்தப்பட்ட நோய்கள் வராமல் காக்கலாம் என மருத்துவர்கள் கூறுகின்றனர்.

அல்சைமர் நோய் வராமல் பாதுகாப்பதில், வால் நட்டுக்கு பெரும்பங்கு உண்டு. அதேபோல் புற்றநோய் வராமல் தடுக்கும். நரம்பு சம்பந்தப்பட்ட நோய்களை தடுக்கும் வால்நட் சாப்பிடுவதால், ரத்தத்தில் கொழுப்பு அளவு குறைந்து, கொலஸ்ட்ரால் சம்பந்தமான நோய்கள் எதுவும் நெருங்குவதில்லை. வால்நட்டில் அதிகளவு நிறைவுறைா கொழுப்பு அமிலங்கள் இருப்பதால், கொழுப்பை குறைத்து, உடலை இளைக்கச் செய்கிறது. உடல் உறுப்புகளுக்கும் பலன் அளிக்கிறது. துரிதமாய் வளர்சிதை மாற்றத்தை ஏற்படுத்தி, கழிவுகளை வெளியேற்றுகிறது. உடல் பருமனானவர்கள் தொடர்ந்து, இதை உட்கொண்டு வந்தால், உடல் எடை குறையும்.

### நினைவாற்றல்

வால்நட்ஸ் நினைவாற்றலை அதிகரிக்க செய்யும். இந்த நலனுக்காக, இதனை கருத்தில் கொண்டு கர்ப்பிணி பெண்களுக்கு இது பரிந்துரைக் கப்படுகிறது. வால்நட் பருப்புகளில் இருக்கும் சில வைட்டமின்கள் மற்றும் புரத பொருட்கள் ரத்தத்தில் கலந்து, மூளைக்கு செல்லும் போது, மூளையின் செல்கள் புத்துணர்வு பெற்று, நன்கு செயலாற்றுவதாக மருத்துவ ஆய்வுகள் உறுதி செய்கின்றன.

### தூக்கம்

வால்நட்ஸ், தூக்கமின்மை மற்றும் இரவு நேரங்களில் அடிக்கடி எதிர்கொள்ளும் அமைதி யின்மையை குணப்படுத்துகிறது . இந்த அறிகுறி கர்ப்பிணி பெண்களுக்கு மத்தியில் மிகவும் அதிகமாக உள்ளது. எனவே வால்நட்ஸ்களை சாப்பிடுவதால், இந்த சிக்கலிலிருந்து விடுபடலாம்.

### தலைமுடி

வால்நட் பருப்புகளில் தலை முடி வளர்ச்சிக்கு தேவையான கெரட்டின் புரதங்கள் அதிகம் இருப்பதால், முடிகொட்டுவது தடுக்கப்படுகிறது. இப்பருப்புகளை தொடர்ந்து உண்ணும் ஆண்களுக்கு தலையில் வழுக்கை ஏற்படும் வாய்ப்பு குறைகிறது.

### பித்தப்பை

நமது உடலில் ஈரல் மற்றும் பித்தப்பை உடலுக்கு தேவையான சக்திகளை உற்பத்தி செய்கிறது. பித்தப்பைகளில் சிலருக்கு கற்கள் உருவாகின்றன. அதை கரைப்பதில் வால்நட்ஸ் சிறப்பாக செயல்படுகிறது.

நட்ஸ் நல்லது என்பதை கேள்விப்பட்டு, ஒரே நாளில் அளவுக்கு அதிகமாக உண்பதும், பின் ஒரே மாதத்துக்கு சாப்பிடாமல் இருப்பதும் நல்லதல்ல. தினமும், 20 கிராம் அளவுக்கு சீரான நட்ஸ் சாப்பிடுவதே சிறந்தது என்கின்றனர், உணவியல் நிபுணர்கள். ஒரே நட்ஸ் வகையை மட்டும், 20 கிராம் சாப்பிடாமல், நட்ஸ் கலவையாக சேர்ந்து 20 கிராம் தினமும் சாப்பிட்டு வந்தால், ஊட்டச்சத்து சரி விகிதமாக கிடைக்கும். சாப்பிடும்போதும், சாப்பிட்டு முடித்தவுடனும், சாப்பாட்டுக்கு முன்னரும் நட்ஸ் சாப்பிட வேண்டாம். உணவு சாப்பிட்ட இரண்டு மணி நேரத்துக்கு பின்பும், அடுத்த உணவு வேளைக்கு இரண்டு மணிநேரத்துக்கு முன்பும் நட்ஸ் சாப்பிடலாம்.

---




- சப்பாத்தி போடும்போது சப்பாத்தி போடும் கட்டையில் முதலில் உருண்டையாக போட்டுவிட்டு பின்பு அதனை நாலாக மடித்து உருட்டி போட்டால் சப்பாத்தி மிருதுவாக இருக்கும்.
- முட்டைகோசில் உள்ள தண்டை வீணாக்காமல் சாம்பாரில் போட்டு சாப்பிட்டால் மிகவும் சுவையாக இருக்கும்.
- கொழுக்கட்டை மாவு பிசையும் போது ஒரு கரண்டி பால் சேர்த்து பிசைந்து கொழுக்கட்டை சுட்டால் விரிந்து போகாமல் இருக்கும்.
- எண்ணெய் பலகாரங்கள் டப்பாவில் வைக்கும் போது உப்பைத் துணியில் முடிந்து வைத்தால் காரல் வாடை வராது.
- வெங்காய பக்கோடாவில் அரை டீ ஸ்பூன் சோம்பு , கறிவேப்பிலை சேர்த்தல் வாசனையாக இருக்கும்.
- மாவு அரைக்கும் போது அரை கப் சாதத்தை சேர்த்து அரைத்தால் தோசை மிருதுவாக இருக்கும்.
- தயிர் நீண்ட நேரம் புளிக்காமல் இருக்க இஞ்சியின் தோலை சீவி விட்டு கொஞ்சம் தட்டி தயிரில் போட்டால் புளிக்கவே புளிக்காது.
- காய்கறிகளை வேகவைக்கும்போது அதிக தண்ணீர் வைத்து வேக வைக்க கூடாது. ஏன் என்றால் காய்கறிகளில் உள்ள வைட்டமின் சத்துகள் போய்விடும். அதில் உள்ள மணமும் போய்விடும்.
- காய்ந்த மிளகாயை வறுக்கும்போது நெடி வரும். அவை வராமல் இருப்பதற்கு சிறிது உப்பு போட்டு வறுத்தால் நெடி வராது.



Published by Dr. Durei Angusamy on behalf of 24 Manai Telugu Chettiar Charitable Trust from 155/203, E.V.R. High Road, Kilpauk, Chennai - 10. and Printed by S.Radhakrishnan at Sri Jayalakshmi Art Printers, 333, Puthu Nagar West Avenue, M.K.B. Nagar, Vyasarpadi, Chennai - 39. **Editor: Dr. Durei Angusamy**



காவிலிபாளையம் ஸ்ரீ அங்காளபரமேஸ்வரி



"எங்களது

**Guru,**
**Guide &**
**Godfather**

**வள்ளல் KCP**

அவர்களின் சமுதாயப் பணி
இன்று போல் என்றும்
சிறந்தோங்க வணங்கி வாழ்த்தும்

## துரை கிருஷ்ணராஜ்

ஆனைமலை மாசாணியம்மன் திருக்கோவில்
முன்னாள் அறங்காவலர், பொள்ளாச்சி



# VMD SONS

**Dealers & Exporters of Rice &
Food Products**

227, Market Road, Pollachi - 642 001.
Phone: 04259 - 326444 / 226649 / 326777

